உ
சிவமயம்

திருவதிகை - மனவாசகங் கடந்தார்

அருளிச் செய்த

# உண்மை விளக்கம்

[மூலமும் உரையும்]

உரையாசிரியர்
சைவப்புலவர்-சித்தாந்த பண்டிதர்
**திரு. இ. செல்லத்துரை அவர்கள்**
*[யாழ்/தட்டாதெரு, இ. த. க. பாடசாலைத் தமிழாசிரியர்]*

வெளியிடுவோர்:
அகில இலங்கைச் சைவப்புலவர் பட்டதாரிகள் சங்கம்,
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை,
வண்ணார்பண்ணை,
யாழ்ப்பாணம், இலங்கை.

அ. இ சை. பு. ப. சங்க வெளியீடு: க

முதற்பதிப்பு: 1963 சோபகிருது – வைகாசி

பிரதிகள்: ஆயிரம்



விலை ரூபா 1 - 50

ஆனந்தா அச்சகம், 226, காங்கேசன்துறைவிதி, யாழ்ப்பாணம்.





## உண்மை விளக்க உரை

### அர்ப்பணம்

திருமலி தமிழெனுந் தீஞ்சுவைத் தேனொடு
பொருவில் சைவப் பெருமருந் தழவித்
துன்னிய மயக்கத் தொன்றே யிரித்திடா
வென்னிலைக் கிரங்கி யீந்திடு வள்ளல்
புரையில் கேள்விப் பண்டித மணியித்
தரைபுகழ் நாவலன் தன்பணிக் காவலன்,
கைலாச பதியொரு மௌன தவமுனி
'கைவிரல் தைவரக்' காட்டிடு பொருளெலாம்
ஆழ்ந்த சிந்தையி னாய்ந் தறிந்து
சூழ்ந்தோ ரகலாச் சிறப்பி னுரைத்திடுஞ்
சீர்பெறு சைவ சித்தாந்த சாகரம்
நேர்மைசால் கண்டனம் நிகழ்த்துநக் கீரன்,
கணபதிப் பிள்ளை,யென் கருத்தைவிட் டகலாக்
குணநலக் குரவனின் செம்மலர்ச் சேவடிக்
கன்புசெய் தான்றேர் அருமர பகலா
தென்சிற் றறிவுக் கேன்றிட வியற்றிய
உண்மை விளக்க வுரையி
தண்ணை லருளா னர்ப்பண மாமே,

— இ. செல்லத்துரை

# பதிப்புரை

நாவலர் ஐயா அவர்களது பெருமுயற்சியினால், சைவ சித்தாந்தச் செந்நெறி தெளிவுற்றுப் பிரகாசித்த நந்தமிழ் நாட்டில், இன்று அச்சமய அறிவும் ஒழுக்கமும் அடிதலை தடுமாறி, நிலைகுலைந்து கிடக்கின்றன.

இந்த நிலையிலே, ஒரு கணக்குக்குப் பலவேறு விடைகளைக் காணும் மாணவர்கள் போல, சமய உண்மைகளுக்குப் பலவேறு வகையில் அர்த்தஞ் செய்து கொண்டு, அறம் புறமான அறிவினாலே கீழ்நிலைப் படாமல் நாம் வாழ்வதற்குச், சைவ சித்தாந்த நூல்களே நம்மை வழிப்படுத்தத்தக்கவைகள் ஆகின்றன.

எனவே, சமயக்கல்வியின் இன்றியமையாமையை நோக்கி, அதனைக் கட்டாய பாடமாக்கிய இந்நாளில், சைவ மாணவர்க்கும் அவரை வழிப்படுத்தும் சைவாசிரியர்களுக்கும் சைவசித்தாந்த நூல் அறிவு தெளிவுற அமையவேண்டும் எனவும், அதற்குத் தேவையான நூல்களை அவர்கள் எளிதிற் பெற வசதியளிக்க வேண்டும் எனவும் எண்ணிக், கிடைத்தற்கரிய சித்தாந்த நூல்களுட் சிலவற்றை வெளியிடுவதற்கு எமது சங்கம் தீர்மானித்தது.

அதன் பயனாய், 'உண்மை விளக்கம்' என்னும் இந்நூல் முதலில் வெளியிடப்படுகின்றது. ஈழத்தில் சைவப்புலவர், சித்தாந்த பண்டிதர் தேர்வுகளுக்குத் தோற்றும் மாணவர்களுக்கு இவ்வெளியீடு உடனே பயன்படுமென்பதை நினைக்குந்தோறும் நாம் பெருமகிழ்ச்சியடைகின்றோம்.

சைவ நன்மக்கள் அனைவரும் இந்நூலை விரைந்து வாங்குவதன் மூலம் ஏனைய நூல்களையும் வெளியிடுவதற்கு ஆதரவும் ஊக்கமும் அளிப்பார்களாக.

இந்நூல் உரையாசிரியர் சித்தாந்தபண்டிதர் சைவப்புலவர் திரு. இ. செல்லத்துரை ('சிறுவைகிழார்') அவர்கள், சைவசித்தாந்த சாகரம் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களிடம் மாணவராயிருந்து மரபுதவறாத கல்வி அறிவு ஒழுக்கங்களைப்பெற்றுக்கொண்ட சிறப்பினை உடையர்; அன்னார், தமது குருவின் ஆசியை முன்வைத்து, இந்நூலாசிரியரது கருத்தை யாவரும் எளிதில் தெரிந்து உணரும்வகையில் மிகத்தெளிவாகவும், தருக்க நியாயந்தவறாமலும் இந்நூலுக்கு உரையெழுதித் தந்துள்ளார்கள், சமய வளர்ச்சியில்



கொண்டுள்ள ஆர்வத்தினாலும் "தன்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற தன்னலமற்ற கருத்தினாலும் எங்களது வேண்டுகோளுக்கிணங்கி இவ்வுரையை எழுதித்தந்த அவர்களுக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய வல்லோம்? உமையொருபாகத்துப் பெருமான், அவர்களுக்கு நீண்ட ஆயுளையும் சுகவாழ்வையும் கொடுத்து இம் மாதிரிப் பல நூல் உரைகள் வெளிவர அருள்புரிவாராக.

நமது பணியைத் தம்பணிபோல் ஏற்றுக் கொண்டு, அன்போடும் ஆதரவோடும் இந்நூலை அழகுற விரைந்தச்சிட்டு உதவிய யாழ்ப்பாணம் ஆனந்தா அச்சகத்தாருக்கு எமது உளம் நிறைந்த நன்றி என்றும் உரித்தாகுக.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக
உலக மெல்லாம்"

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
வித்தியாசாலை,
வண்ணார்பண்ணை.
௨௦-வைகாசி-சோபகிருது
[ 13-6-1963 ]

இங்ஙனம்
அகில இலங்கைச் சைவப்புலவர்
பட்டதாரிகள் சங்கத்தார்.

உ

திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலை முன்னைநாள் தமிழ்ப் பேராசிரியர்

சைவசித்தாந்தசாகரம்

பண்டிதமணி திரு. சி. கணபதிப்பிள்ளை அவர்கள் அளித்த

# அணிந்துரை

இந்நூல் வினாவும் விடையுமாய் அமைந்தது. வினாக்களுள் 'ஆறாறு தத்துவம் ஏது?' என்ற வினா முதன்மையானது. தத்துவம் மாயாவிநோதம். மாயை விடிவாமளவும் விளக்கு அனையது. அது சொற்பிரபஞ்சமும் கருத்துப் பிரபஞ்சமுமாய் அறிவை விளக்கஞ்செய்வது. கருத்துப் பிரபஞ்சத்தைச் சேர்ந்தது தத்துவம். தத்–அது. துவம்–நீ. முன்னிலைப்படாத அது, முன்னிலைப்படுதற்கு உபகாரஞ்செய்வதால் இப்பெயர் எய்தியது போலும். 'தத்துவம் அசி' என்கின்ற வேதாந்த மகாவாக்கியம் ஈண்டுச் சிந்தனை செய்யத்தக்கது.

தத்துவம் முப்பத்தாறு. அவை சிவதத்துவம் வித்தியா தத்துவம் ஆன்ம தத்துவம் என முத்திறப்படும். முறையே ஐந்து, ஏழு, இருபத்து நான்கு எனத் தொகை கொள்ளப்படும்.

ஆன்ம தத்துவம் இருபத்துநான்குஞ் சுத்தமானால், ஆன்மா இந்த உடலின் வேறாய்த் தன்னைக் காணும். ஆன்மா சார்ந்ததன் வண்ணமானதாதலின், அந்நிலையில் அது பிரமத்தைச் சார்ந்து பிரமத்தின் வண்ணமாய்த் தோன்றும். இப்பொழுது நீ யார் என்று விசாரித்தால் 'நான்பிரமம்' என்று அது சொல்லும். ஒருநாள் உடலைச் சார்ந்து உடலின் பெயரைத் தனக்கு இட்டுக்கொண்டிருந்த ஆன்மா, மற்றொருநாள் பிரமத்தைச் சார்ந்து பிரமத்தின் பெயரைத் தனக்கு இட்டுக்கொள்ளும். 'நான் பிரமம்' என்கின்ற இந்த உயர்நிலையை வருவிப்பதற்கு உபகாரமானது உபநிடதமாகிய வேதாந்தம்.



நாம் இந்த உடலாயிருந்து கொண்டே, ஆன்மா உடலின் வேறு என்று உணருகின்றோம். அவ்வாறே உயர் நிலையில் ஆன்மா பிரமமாயிருந்துகொண்டே பிரமத்தில் வேறுதான்என்பதைக்கோடிமடங்குதெளிவாகஉணரும். ஆயினும், பிரமத்தின் உண்மை இயல்பையும் அதன் அத்துவித உபகாரத்தையும் உணர்ந்து வீடுபெற்று அதனோடேகமாதற்கு இன்னமும் எத்தனையோ சாதகங்கள் சித்திக்கவேண்டும். அதற்குபகாரமானவை ஆன்மதத்துவத்துக்கு மேற்பட்ட தத்துவ விசாரங்கள்.

வித்தியா தத்துவங்கள் ஏழனையும் ஒன்றாக எண்ணி, சிவதத்துவம் ஐந்துடன் கூட்டி ஆறுவகைசெய்து, அவற்றின் உண்மை இயல்பை உணர்வது, 'நான்பிரமம்' என்கின்ற வேதாந்த நிலையில் தவறுண்ணாது நிலைத்து நின்று உய்தி கூடுதற்கு உபகாரம் ஆகும். வித்தியாதத்துவமும் மேலுள்ள ஐவகைச் சிவதத்துவமுமாகிய ஆறுவகையும் உட்கருவியெனவும், உட்கருவிகள் ஆறனையும் பற்றி நிற்பவை அகச்சமயமாகிய ஆறு சமயங்கள் எனவுங் கூறுவர்.

அகச் சமயங்களாறாவன 'மெய்தரு சைவமாதியிரு மூன்று' என்கின்றது சித்தியார். ஆறனுள் ஒன்று சைவம். ஏனைய ஐந்தும் எவை என்பது விசாரத்துக் குரியது. பாடாண வாதம் என்று தொடங்கி எண்ணப்படுபவைகள் பொருத்தம் ஆகா. அறுவகையுள் சைவம் ஒன்றாயினும், ஆறனையும் சைவம் என்று வழங்குவதுமுண்டு. 'ஒன்றோடொன்று சென்றுறு நிலையில் ஆறும் மாறா வீறுடைத்து' என்பது சங்கற்ப நிராகரணம்.

இந்த ஆறு சமயங்களும் வேதாந்தப் பொருளை விளக்கஞ்செய்ய எழுந்தவைகளேயாம். 'வேதாந்தத்தில் பொருள் கொண்டுரைக்கு நூல் சைவம்' என்பது சித்தியார்.

வேதாந்தப்பொருள் விளக்கமாகிய அறு சமயத்தின் முடிந்தமுடிபு சித்தாந்தம். அது சைவ சித்தாந்தம் எனவும்படும். அதனைப் போதிப்பது சிவஞானபோதம்.

அறுசமயம் வேதாந்தப் பொருள் விளக்கம். முடிந்த முடிபாகிய சைவ சித்தாந்தம் வேதாந்தத் தெளிவு. 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்' என்பது சிவப்பிரகாசம்.

வேதாந்தம் அறுசமயம் சித்தாந்தம் என்னும் இவற்றின் தொடர்பை விளங்குதற்கு உபகாரமானது ஈண்டு முதற்கணெடுத்துக் கொண்ட தத்துவவிசாரம். இவ்விசாரம் ஏனைய வினுக்களை விடுவித்தற்கும் இன்றியமையாதது. அங்ஙனமாதலை இந்நூலிலும் உரையிலுங் காணலாகும். இவ்வாற்றுல் சைவசித்தாந்த உணர்ச்சிக்கு இந்நூல் வேண்டற்பாலதென்பது புலமாம்.

இந்நூலின் பழைய உரை சுருக்கமானது. அதனை விரித்தும் பதப்பொருள் தெரித்தும் வேண்டுமிடத்து விளக்கந்தந்தும் நடக்கின்றது இந்நூலுரை. நடை தெளிவானது. இவ்வுரையை எழுதி உதவியவர் பண்டிதரும் சைவப்புலவருமான திரு. இ. செல்லத்துரை அவர்கள். மனத்தூய்மையும் ஒழுக்கசீலமும் படைத்தவர் அவர். அவருடைய எழுத்துக்கள் சைவமரபு பிறழாதவை; பேணிப்படிக்கத்தக்கவை.

திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்.
உகூ-வைகாசி-சோபகிருது.
[9-6-1963]

—சி. கணபதிப்பிள்ளை

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைமையாசிரியர்
**சைவப்புலவர் பண்டிதர் வித்துவான் திரு. இ. திருநாவுக்கரசு**
அவர்கள் அளித்த

# உரைச்சிறப்புப்பாயிரம்

## பஃறொடைவெண்பா

1. சீர்மேவு கோகனகச் செம்போ துறையயனுய்ப்
பார்மேவு தோற்றம் பலபடைத்தும் - நீர்சேர்
2. திகிரி வலங்கொண்ட செங்கண்மா லாகி
மகிதலத்து மன்னுயிர்பு ரந்தும் - அகிலாண்டம்
3. தாஞு முமை பால்கொள் சங்கார ருத்திரனுய்
ஆஞு வவை துடைத்தும் ஆரருளால் - மோனத்
4. தொடுக்கி மகேசுரனுய் ஓங்குவலி சாயக்
கெடுத்தமுக்கி மூலமலம் சாய்த்தும் - அடுத்தவுயிர்க்
5. கின்பி லினிதாய் இலங்கு சதாசிவமாய்
நின்றருளு ஞான நிறை பொருளாய் - மன்றில்
6. அநவரத தாண்டவத்துள் ஐந்தொழிலும் இன்ப
விநய நடம் வீழ்ந்தாட லைந்தும் - புனிதமுற
7. நின்றுடும் ஆறும் நிகழ்த்து மதனுலே
பஞ்சாக் கரவடிவம் பாலித்து - ஒன்றுகி
8. எட்டு மிரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் பயின்றருளும் நாதனுர் - மட்டாகி
9. வாக்கு மனுதீத மதி துரிய முங்கடந்த
தேக்குபர மானந்த தேசிகன் - மீக்கருணை
10. வேதாந்த சித்தாந்தம்விரி கலாந் தங்கடந்த
நாதாந்த மூலம் நமசிவயம் - போதத்
11. தருக்கனெளி கண்ணெளியி னத்துவித மாகிப்
பெருக்கநின் றின்பம் பெருக்கும் - திருத்தகு
12. முந்துசிவம் உண்மை விளக்கம் தனிலுரைத்த
எந்தை மனவாச கங்கடந்தார் - பைந்தமிழால்

13. சாத்திரியவெண் பாவாடி தன்னோடு கண்டிறைவன்
தோற்றம் உணரத் தொகுத்துரைத்தான் – நாற்கவியும்

14. வல்ல தமிழ் முனிவன் மட்டுநகர் வாழ்வுகந்தோன்
நல்லை நகர் ஆறுமுக நாவலர்சீர் - சொல்லுயர்

15. சித்தாந்த சாகரம் சீர்பண் டிதமாணி
நற்கணப திப்பிள்ளை நாவல்லோன் – பொற்பதமே

16. சூடு குணச் செம்மல் சிறுவை கிழார் வாணியகம்
கூடும் அறிஞன் குலநல்லோன் - பாடுபுகழ்

17. தேக்கு புதுவைநகர்ச் சிவைதா சென்றநெறி
ஊக்கி உழைத்துயர்ந்த உத்தமன் - ஆக்கியோன்

18. செல்வன்சை 'வப்புலவன் செல்லத் துரையெனும்
நல்லோன் புகழ்நின் றிந் நானிலத்து - மல்க [பேர்

19. வாழிய சைவம் வளர்க சிவஞானம்
ஊழிதோ றூழி உயர்ந்து.

சுபம்.

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்
சைவப்பிரகாச வித்தியாசாலை
வண்ணார்பண்ணை, யாழ்ப்பாணம்.
உஅ-வைகாசி சோபகிருது
[11-6-1963]

இ. திருநாவுக்கரசு

---

உ

# உரையாசிரியரின் முன்னுரை.

"கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே." (சி. போ. காப்பு)

உண்மைப் பொருளாகிய தம்மைத் தெளிந்த அறிவினால் உணர்ந்து கலந்து, ஆன்மா ஈடேறுவதற்கு இறைவனால் அருளப்பட்ட நூல்கள் இரண்டு. ஒன்று வேதம்; மற்றது ஆகமம். ஒருவன் தன்னைத்தான் காதலனாய் விலக்கியன ஒழித்து வையத்துள் வாழ் வாங்கு வாழும் முறைமையை விளக்குவது வேதம். அங்ஙனம்

**வைதிக சைவம்**

வாழ்ந்து பக்குவமுடையனாயினான் இறைவழிப்பட்டு ஒழுகவேண்டிய நெறியைப் படிமுறையே உரைப்பது ஆகமம். வேதவழிப்படுதலை வைதிகம் எனவும், ஆகம வழிப்படுதலைச் சைவம் எனவுங்கொண்டு எமது சமயத்தை "வைதிக சைவம்" எனப்பெரியோர் கூறுவர். வேதம் ஆகமம் என்னும் இரண்டும் முறை சிறந்து பயனடைவிக்கும் ஒழுங்கு பற்றி வேதத்தைப் பொதுநூலாகவும் ஆகமத்தைச் சிறப்புநூலாகவுங் கொள்ளுவது மரபு.

வைதிக சைவத்தின் சிறப்புநூல்களாகக் கொள்ளப்பட்ட சிவாகமங்கள், வேதங்களின் இறுதியில் அறுதியிட்டுரைக்கப்பட்ட ஞான காண்டப் பொருளை உரைப்பன. இவ்வேதாந்தத்தின் உட்கிடை

**சைவ சித்தாந்தம்**

யாகிய சிவாகமங்களை விளக்க எழுந்த நூல்கள் தமிழிலே பதினான்குள.

"உந்தி, களிறு, உயர்போதம், சித்தியார்,
பிந்திருபா, உண்மை, பிரகாசம், — வந்தவருள்,
பண்புவினா, போற்றி, கொடி, பாசமிலா நெஞ்சுவிடு,
உண்மைநெறி, சங்கற்ப முற்று," என அந்நூல்கள்
பதினான்கையும் இவ்வெண்பா குறிப்பிடுகின்றது.

இறைவன் ஒருவன் உளன் என்றும், அவன் சிவனே என்றும், அவனை அடைந்து இரண்டறக் கலந்து பேரின்பம் அநுபவிப்பதற்காய் உயிர்கள் எண்ணிறந்தன உள என்றும், அவ்வுயிர்கள் அங்ஙனம் நல்வாழ்வு பெறுவதற்காக இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட தநு கரண புவன போகங்கள் உள என்றும், ஆன்மாக்களை அநாதியே பற்றிநிற்கும் ஆணவமயக்க நீக்கத்தின் பொருட்டு, தநுகரணம் முதலியவற்றோடு திரோதான சத்தி ஆன்மாவைப்பொருத்தி, "விடிவளவும் விளக்கு" எனநின்று, துணைபுரியும் எனவும், இவ்வுதவிகளை

யெல்லாம் தமது ஒப்பற்ற (சிற்சத்தியாகிய) பேரருளினுலே வழங்கியருளுகின்ற இறைவனை நன்றியறிதலுடன் மனம் மொழி மெய்களினுல்வழுத்திச் (சிவபுண்ணியங்களாகிய)சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படிகளிலே முறைதவருமல் நிற்றலினுல் அவ்வான்மாக்கள் 'தாடலை' போல் அத்துவித முத்திபெற்றுய்யுமெனவும் இந்நூல்கள் முடிந்த முடிபாக அறுதியிட்டுரைக்கும். இங்ஙனமுரைக்கும் இந்நூல்களை "வேதாந்தத்தெளிவாம் சைவசித்தாந்தம்..." என்ப.

**சைவ சித்தாந்த சங்கிரகம்**

சைவசித்தாந்த நூல்கள் பதினுன்கனுள் ஒன்ருய 'உண்மை விளக்கம்' சைவ சமயி அறியவேண்டிய உண்மைப் பொருள்களை இரத்தினச் சுருக்கமாக (-சங்கிரகமாக) அளவு படுத்தி வரையறை செய்து கொண்டு (மாணுக்கனுடைய வினுவுக்கு ஆசிரியருரைக்கும் விடையாக அமைத்து) இயற்றப்பெற்றது. அதனுல் இந்நூல் "சைவசித்தாந்த சங்கிரகம்" எனக்கொள்ளத்தக்கது.

"ஆருறு தத்துவம் ஏது? ஆணவம் ஏது? அன்றேதான்
மாரு வினை ஏது? மற்று, இவற்றின்—வேறு ஆகா
நான் ஏது? நீ ஏது? நாதன் நடம் (ஏது?) ஐந்து எழுத்துத்
தான் ஏது? தேசிகனே சாற்று." என்னும் ஏழு வினுக்களை

மாணுக்கன் வினுவுவதாக வைத்துக்கொண்டு, பாசம் பசு பதி ஆகிய முப்பொருள் உண்மையைக் காட்டுமுகத்தால், பாசங்களுள் ஒன்ருகிய (மாயையில் இருந்து உளவாகும்) முப்பத்தாறு தத்துவங்களையும் மற்ருென்ருகிய ஆணவத்தையும் இன்னென்ருகிய கன்மத்தையும் அநாதியே இப்பாசங்களாற் பிணிப்புண்ட (நான் ஆகிய) பசுவையும் அப்பசுவுக்குப் பெத்தம் முத்தி என்னும் இருவேறு நிலையிலும் துணை நின்று சுகஞ்செய்யும் (நீ ஆகிய) பதியையும், பசுவின் நன்மைகருதிப் பஞ்சாக்கரமே திருமேனியாகப் பசு பதி (-நாதன்) நடாத்தும் ஐந்தொழிலைக் குறிக்கும் திருநடனத்தையும், வேத வேதாந்த சிவாகமங்களின் உட்கிடையாகிய திருவைந்தெழுத் துண்மையையும், அதன் முடிந்த முடிபாகிய முத்திப்பயனையும் ஆசிரியர் இந்நூலில சுருங்கக்கூறி விளங்கவைக்குந் திறன் போற்றுதற்குரியது. [ஐந்தெழுத்துத்தானேது? என்பதனை "ஐந்து எழுத்து ஏது? தான் (ஆய் நிற்கும் முத்திநிலை) ஏது? எனப்பகுத்து இருவினுக்களாக்கிக் கொண்டு மொத்தமாக எட்டு வினுக்களுக்கு இந்நூலில் விடை கூறுவதாகவும் வைத்துக்கொள்ளலாம். இஃது அன்றி, "இறைவனின் பஞ்சாக்கரமாகிய திருமேனியும் அதுகொண்டு இயற்றப்பெறுவதாகிய பஞ்சகிருத்தியத் திருநடனமும் அதனுல் வரக்கடவதாகிய முத்திப்பயனும் தம்முள் ஒன்றுக்கொன்று ஆதாரமாதலானும், பிரித்திருத்தலின்மையானும், இம்மூன்றும் ஒரே சமயத்திலேயே ஆன்மாவால் அநுபவிக்கப்படுதலானும் (இவ்வியல்புடைய) இவற்றை விளக்குதற்காய் எடுத்துக்கொண்ட வினுவையும் (அவ்வியல்புக் கமையுமாறு) மூன்று



வினுக்கள் கலந்த ஒரேவினு நீர்மையதாய்; 'நாதன் நடம் ஐந்தெழுத்துத் தான் ஏது?' என ஆசிரியர் கூறிப்போந்தார்" என்பாரும் உளர் ஆதலால் இவர் கூற்றின்படி ஆறு வினுக்களுக்கே இந்நூல் விடையிறுக்கின்றது எனவும் கொள்ளலாம்.]

**செய்யுள்களும் பொருள் வைப்பும்**

உண்மை விளக்கம் 55 செய்யுள்கள் கொண்டது. விநாயக வணக்கமாய் அமைந்த காப்புச்செய்யுள் தவிர்ந்த ஏனைய 54 செய்யுள்களில் 1 ஆம் 2 ஆம் செய்யுள்கள் மாணுக்கனது விண்ணப்பமும் (தொகுத்துக் கூறிய) வினுக்களும் அமைந்தவை. 3 ஆம் செய்யுள் விடைகூறும் ஆசிரியரின் முன்னுரையாய் அமைந்தது. முதல் வினுவாகிய 'ஆருறுதத்துவம் ஏது?' என்பதற்கு 4 தொடக்கம் 21 வரையுள்ள 18 செய்யுள்களாலும், இரண்டாம் வினுவாகிய 'ஆணவம் ஏது?' என்பதற்கும் மூன்ரும் வினுவாகிய 'அன்றே தான் மாரு வினை ஏது?' என்பதற்கும் 22 ஆம் செய்யுளாலும், நான்காம் வினுவாகிய '(நான்) ஆன்மா ஏது?' என்பதற்கு 24 தொடக்கம் 26 வரையுள்ள 3 செய்யுள்களாலும், ஐந்தாம்வினுவாகிய '(நீ) பதி ஏது?' என்பதற்கு 27 தொடக்கம் 29 வரையுள்ள 3 செய்யுள்களாலும், ஆரும் வினுவாகிய 'நாதன் நடம் ஏது?' என்பதற்கு 31 தொடக்கம் 38 வரையுள்ள 8 செய்யுள்களாலும், ஏழாம் வினுவாகிய 'ஐந்தெழுத்து ஏது?' என்பதற்கு 40 தொடக்கம் 44 வரையுள்ள 5 செய்யுள்களாலும், இறுதியில் விண்ணப்பிக்கப்படும் (குறிப்பாயமைந்த) எட்டாம் வினுவாகிய 'முத்தி யாவது யாது?' (-தானேயாய் நிற்கும் முத்தியாது?) என்பதற்கு 45 தொடக்கம் 48 முடியவும் 50 தொடக்கம் 52 முடியவும் வருகின்ற 7 செய்யுள்களாலும் ஞானசாரியர் விடை கூறியுள்ளார். இவை தவிர்ந்த 23 ஆம் 30 ஆம் 39 ஆம் செய்யுள்களால் மாணுக்கனது வினுவாயமைந்த வேண்டுகோள்கள் வகுத்துரைக்கப்பட்டன. 53ஆம் செய்யுள் உண்மை விளங்கப்பெற்ற மாணுக்கன் ஞானசாரியருக்குத் தன் நன்றியைத் தெரிவிப்பதாக அமைந்துள்ளது. இறுதிச்செய்யுள் தேவாரங்களின் 'கடைக்காப்பு'ப் போல அமைந்தது. அச்செய்யுளால் நூல், நுவல்வோன் பெயர் முதலியன குறிப்பிடப்பட்டுள.

**சித்தாந்த அரிச்சுவடி**

சிவஞானபோதம் சிவஞானசித்தியார் சிவப்பிரகாசம் முதலிய நூல்களில் விரிவாகக் கூறப்பட்ட உண்மைகள் இந்நூலில் 'வித்தினுள் ஆல்' போல அடங்கியுள்ளன. வித்துடையார் அதனை வளர்த்துப் படிமுறையே விரிவான அறிவையும் பயனையும் பெற்றுக்கொள்ளலாமாதலால் (வித்தனையதாகிய) உண்மை விளக்கத்தைச் சைவநன்மக்கள் சித்தாந்த அரிச்சுவடியாக - ஆதாரமுதல் நூல் (Primer of Saiva Siddhanta) ஆகக்கொண்டு முதற்கண் பயிலுவது முறைமையானது.

இந்நூலாசிரியர் பெயர் மனவாசகங் கடந்தார் என்பதும் அவர் திருவதிகையில் வாழ்ந்தார் என்பதும், புறச்சந்தானசாரியர் நால்வருள் முதலாமவராகிய திருவெண்ணெய் மெய்கண்டதேவநாயனார் மனவாசகங் கடந்தாருக்குக் குருவாயிருந்து பயனடைவித்தாரென்பதும் இந்நூலில் வரும் சில செய்யுள்களால் அறியற்பாலன.

**நூல் ஆசிரியர்**

54 ஆம் செய்யுளில் வரும் "மன்னதிகை வாழும் மனவாசகங் கடந்தான்... உண்மை விளக்கஞ் செய்தான் உற்று" என்னுந்தொடரால் இந்நூற்பெயரும் நூலாசிரியர் பெயரும் அவர் வாழ்ந்த பதியும் கூறப்பட்டன. 1 ஆம் செய்யுளில்வரும் "மெய்கண்டாய் .. திருவெண்ணெய் வித்தகா" என்னுந் தொடராலும், 53 ஆம் செய்யுளில் வரும் "வெண்ணெய்ச்சுவேதவன மெய்கண்டநாதனே" என்னுந் தொடராலும் 54 ஆம் செய்யுளில் வரும் "மின்னனையார் வாழ்விலுறு மெய்கண்டான்" என்னுந் தொடராலும் இந்நூலாசிரியரது குருவின் பெயர் குறிப்பிடப்பட்டுளது. மனவாசகங் கடந்தாரது (விரிவான) வரலாற்றுக் குறிப்புக்கள் கிடைத்தில.

சித்தாந்த நூல்களைப்பயில விரும்பும் சைவசமயிகள் அந்நூல்களை ஈழத்திற் பெறுதற் கியலாமையினாலும் தாய் நாட்டிலிருந்து வரவழைத்தற்கும் பல தடைகள் குறுக்கே நிற்றலினாலும் வருந்துவது கண்டு அவர் குறை நீக்கவேண்டியும், சைவப்புலவர் சித்தாந்த பண்டிதர் தேர்வுகளுக்குத் தோற்றும் மாணவர்க்கு உதவும் பொருட்டும், அ. இ. சை. பு. பட்டதாரிகள் சங்கத்தின் சைவப் பணியை விருத்திசெய்யும் நிமித்தமும் இந்நூலுக்கு உரை எழுதி வெளியிட நேர்ந்தது.

**இந்நூலுக்குரை எழுதக் காரணம்**

இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று உளது. அதனைப் பற்றுக்கோடாகக் கொண்டு, எனது (மயக்க) உணர்வுக்கு எட்டிய அளவில் 'கொண்டுகூட்டு', பதவுரை, பொழிப்பு என்பனவும் இன்றியமையாத இடங்களில் சற்றே விரிந்தவிளக்கமும் எழுதியுள்ளேன். நூல் இறுதியில் உரை ஆசங்கை விளக்கம், நடேசர் பட விளக்கம், தத்துவவிளக்க அட்டவணை என்பன அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள. எனினும் இவற்றுள் பரிபூரண உண்மை விளக்கமாம் என்பதற்கில்லை. "அரியகற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு" என்பவாதலால், அரியவத்தனையும் கற்றறிந்து இல்லா என்னுரையிற் பிழைபலவுளவாம் என்பதை மறுக்கமுடியாது. ஆகவே, அடியேனிடத்தும், இந்நூலைக் கற்போரிடத்தும், சைவசமய மெய்ப்பொருள்களிடத்தும் அன்பும்

**இந்நூலுரை**



அபிமானமும் உள்ள சான்றோர்கள் இந்நூலில் வரும் குற்றங்குறைகளை அறியத்தருவார்களாயின் அவை நன்றியறிதலோடு ஏற்றுக் கொள்ளப்படும்.

**நன்றி**

இந்நூலுக்கு உரையெழுதித் தருமாறு அன்புக்கட்டளையிட்டு, (இந்நூலை) வெளியிட்ட எமது அ. இ. சை. பு. ப. சங்கத் தலைவர் சைவப்புலவர் வித்துவான் திரு. வ. செல்லையா, கௌரவ பொதுச் செயலாளர் சைவப்புலவர் வித்துவான் திரு. ச. சச்சிதானந்தம், செயற்குழுவினர் ஆகியோர்க்கும், இத்துறையில் துணிவும் ஊக்கமுந் தந்து செயற்படுத்திய வண்ணை நாவலர் பாடசாலைத் தலைமையாசிரியர் சைவப்புலவர் வித்துவான் பண்டிதர் திரு. இ. திருநாவுக்கரசு அவர்களுக்கும், அவ்வப்போது அழகுந் திருத்தமும் பொருந்தக் கையெழுத்துப் பிரதி செய்துதவிய இளஞ்சைவப்புலவர் செல்வி சி. சின்னத்தம்பு அவர்களுக்கும், யாவரும் அறிந்து பயனுறவும் அறிஞரால் எனதுரை இழுக்கின்றித் திருத்தமுறவுந் தக்கதாய் இந்துசாதனத்திற் பிரசுரித்து உதவிய பெரியார் (பத்திராதிபர்) திரு. நம. சிவப்பிரகாசம் அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகுக.

நான் விரும்பிச் செய்யும் சைவ நற்பணிகளைச் சிறப்பிப்பதற்கு ஆரும் அறியாவகையில் என்றும் எனக்கொரு புரவலனாய் அமைந்து ஊக்கந்தரும் உடனுசிரிய நண்பர் கைதடியூர் திரு. இ. வேலாயுதர் அவர்களுக்கு என்னன்றி என்றுமுரித்து.

**வணக்கம்**

"மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்" போல இந்நூலுரைக்கு இன்றியமையாதனவாகிய அணிந்துரை பாயிரம் என்பவற்றை மனமுவந்து அளித்த பெரியார் இருவருளர். அவருள் அணிந்துரை உதவியவர் எனது ஆசிரியப் பெருந்தகை சைவ சித்தாந்த சாகரம் பண்டிதமணி திரு. சி. கணபதிப்பிள்ளையவர்கள்; பாயிரம் அளித்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைமையாசிரியர் சைவப்புலவர் பண்டிதர் வித்துவான் திரு. இ. திருநாவுக்கரசு அவர்கள். இப்பெரியார்களுக்கு எனது நன்றிகலந்த வணக்கங்கள் உரியன

"வணியகம்"
சிறுப்பிட்டி. —இ. செல்லத்துரை
உசுஅ - வைகாசி-சோபகிருது
[12-6-1963]

உ
சிவமயம்

# உண்மை விளக்கம்

## பொருளடக்கம்



உ
சிவமயம்.

திருவதிகை-மனவாசகங் கடந்தார்
அருளிச் செய்த

# உண்மை விளக்கம்

மூலமும் உரையும்

### காப்பு

வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மை விளக்கம் உரைசெய்யத்—திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம்.

கொண்டு கூட்டு: (நாம்) வண்மை தரும் ஆகமநூல் வைத்த பொருள் உண்மை வழுவா விளக்கம் உரை செய்ய, (எமது) பந்தம் அற, திண்மதம் அந்தி நிறம் தந்தி முகம் தொந்தி வயிறு சேர் ஐங்கரனை புந்தியுள் வைப்பாம்.

பதவுரை: வண்மை தரும் ஆகமநூல்— பேரின்பமாய உண்மைச் செல்வத்தைத் தருகின்ற ஆகம நூலிலே, வைத்த – ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு இறைவன் அருளிச் செய்து வைத்த, பொருள்—பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களினதும், உண்மை வழுவா விளக்கம் – உண்மை(யானது) சற்றேனும் தவறாமல்

காட்டும் தெளிவினை, உரைசெய்ய – (இவ்வுண்மைவிளக்கம் என்னும் நூலில்) சொல்லுவதற்கும், பந்தம் அற — மலபந்தம் ஒழியும்பொருட்டும், திண்மதம் அந்திநிறம் தந்திமுகம் தொந்தி வயிறு சேர் ஐங்கரனை — (ஞானசத்தி கிரியாசத்தி ஆகிய இரண்டு) வலிய மதங்களும், செவ்வானத்தையொத்துப் பிரகாசிக்கின்ற நிறமும், (பிரணவக் குறியாகிய) யானை முகமும், பெரிய வயிறும் பொருந்திய ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக் கடவுளை, புந்தியுள் வைப்பாம் – நாம் எமது சித்தத்துள் இருத்தித் தியானிப்பாம்,

மதம் மூன்றாகவும் அவற்றுள் இரண்டையே எடுத்துக்கொண்டு அவற்றுக்குக் கிரியாசத்தி ஞானசத்தியெனப் பொருளுரைத்தமைக்குரிய விளக்கத்தை அநுபந்தத்துட் காண்க.

பொழிப்பு: பதி பசு பாச உண்மையைத் தெளிவுபடவுரைக்கவும் பாசமறுத்து வீடெய்தவும் விநாயகக் கடவுளைத் தியானிப்போமாக.

## நூல்

### மாணாக்கனின் வினா விண்ணப்பம்

1. பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந் தப்பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் — பொய்காட்டா
மெய்யா! திருவெண்ணெய் வித்தகா! சுத்தவினா
வையாநீ தான்கேட் டருள்.

கொ—கூ: (பக்குவான்மாவுக்குப்) பொய் காட்டி, பொய் அகற்றி, போத ஆனந்தப் பொருளாம் மெய் காட்டும் மெய்கண்டாய், (அபக்குவான்மாவுக்கு) பொய் காட்டா மெய்யா, திருவெண்ணெய் வித்தகா, ஐயா, நீதான் சுத்த வினா விண்ணப்பம் கேட்டருள்.

ப—ரை: பொய்காட்டி-பக்குவான்மாவுக்குத் தநு கரண புவனபோகங்கள் பொய் எனக் காட்டி, பொய் அகற்றி – அப் பொய் அனுபவங்களை ஆன்மா பெற்றுக்



கொள்ளுவதினின்றும் நீக்கி, போத ஆனந்தப் பொருளாம் மெய்காட்டும் – (அங்ஙனம் நீங்கச் செய்தவிடத்துப் பரிசுத்தமாய் நின்ற) ஆன்மாவின் அறிவிலே பேரானந்தம் தந்தருளுகின்ற இறைவனின் உண்மை இயல்பினை விளக்கியருளுகின்ற, மெய்கண்டாய் – (சுவேதவனப் பெருமாள் என்னும் இயற்பெயரையுடைய மெய்கண்ட நாதனே, பொய்காட்டா மெய்யா – (அபக்குவான்மாவுக்குப்) பொய்யை விளக்கிக் காட்டாத சத்தியத்தை உடையவனே, திருவெண்ணெய் வித்தகா – திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கின்ற ஞானதேசிகனே, ஐயா – தலைவனே, சுத்த வினா விண்ணப்பம் நீதான் கேட்டருள் – எனது பரிசுத்தமான வினாமுறையில் அமைந்த வேண்டுகோளை நீ திருச்செவி சாய்த்து அருளவேண்டும்.

பொழிப்பு: பக்குவர்களுக்குப் பொய்யகற்றி மெய் அருளுகின்ற திருவெண்ணெய் மெய்கண்டதேசிகனே நீ அடியேனது வினாவாயமைந்த விண்ணபத்தைக் கேட்டருளுவாயாக.

### மாணாக்கனின் வினாக்கள்:

2. ஆறாறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாறா வினையேது மற்றிவற்றின் — வேறாகா
நானேது நீயேது நாதன்நடம் அஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று.

கொ—கூ: தேசிகனே, ஆறு ஆறு தத்துவம் ஏது? அன்றே (உளதாய் இன்று வரையும்) தான் மாறா ஆணவம் ஏது? வினை ஏது? (மற்று) இவற்றின் வேறு ஆகா நான் (ஆன்மா) ஏது? நீ (பதி) ஏது? நாதன் நடம் ஏது? அஞ்சு எழுத்துத்தான் ஏது? (நீ) சாற்று.

ப—ரை: தேசிகனே - எனது ஞானாசிரியனே, ஆறு ஆறு தத்துவம் ஏது – முப்பத்தாறு தத்துவங்கள் எனச் சொல்லப்படுபவை யாவை? அன்றே தான் மாறா ஆணவம் ஏது – அநாதியே ஆன்மாவோடு உளதாய் இன்று

வரை விட்டு நீங்காத ஆணவமலம் யாது? வினை ஏது- வினை என்று சொல்லப்படுவது யாது? (மற்று) இவற்றின் வேறு ஆகா நான் ஏது? - இம் மும்மலங்களைப் பற்றி நின்றவிடத்து இவற்றின் வேறாகாமல் இவையேயாய் நின்ற எனது சொரூப இலக்கணம் யாது? நீ ஏது-இறைவனது சொரூப இலக்கணம் யாது? நாதன் நடம் ஏது- -ஆன்ம நாதனாகிய இறைவனது திருநடனம் யாது? அஞ்செழுத்துத்தான் ஏது - திருவைந்தெழுத்தின் உண்மைப் பொருள் யாது? (நீ) சாற்று - (இவ்வினாக்களுக்குரிய விடைகளை நீ) சொல்லியருளுவாயாக.

'நாதன் நடம் அஞ்செழுத்துத்தானேது?' என்பதனை 'நாதன் நடம் ஏது?' 'அஞ்செழுத்து ஏது?' 'தான் ஏது?' என மூன்று வினாக்களாக வகுத்துக்கொண்டு அவற்றுள் 'தான் ஏது?' என்பதற்கு இறைவன் தானேயாய் நிற்கும் அத்துவித முத்தியின் இலக்கணம் யாது?' எனவும் பொருள் கொள்ளலாம்.

பொழிப்பு: ஆரூறு தத்துவம், ஆணவம், வினை, ஆன்மா, பதி, திருநடனம், திருவைந்தெழுத்து என்பன யாவை? ஞானாசிரியனே கூறுவாயாக.

தேசிகனின் முன்னுரை:

**3.** **உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்றனக்கு**
**வள்ளலரு ளாலன்று வாய்மலர்ந்து — தெள்ளியசீர்**
**ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த**
**யோகம் நிகழ்புதல்வா உற்று.**

கொ—கூ: ஆனந்த யோகம் நிகழ்புதல்வா, உன்றனக்கு, வள்ளல் அருளால் அன்று வாய் மலர்ந்து சொன்ன சீர் ஆகமங்கள் உள்ளபடி, அடைவிலே தெளிய, இத்தை உரைக்க உற்றுக்கேள்.

ப—ரை: ஆனந்த யோகம் நிகழ் புதல்வா - பேரானந்த நிலையைப் பொருந்தி இருப்பதற்குப் பக்குவமான மாணாக்கனே, உன்றனக்கு-உனக்கு, வள்ளல் அருளால்— பரோபகாரியான இறைவன் தம்மிடம் இயல்பாகவே



பொருந்தியிருக்கும் பேரருளினாலே, அன்று வாய் மலர்ந்து சொன்ன - அநாதியே திருவாய் மலர்ந்தருளிய, சீர் ஆகமங்கள் உள்ளபடி அடைவிலே தெளிய - சிறப்புப் பொருந்திய சிவாகமங்களில் உள்ள உண்மை இருந்தபடி முறைமையாகத் தெளியும் பொருட்டு, இத்தை உரைக்க உற்றுக்கேள் - இதனை (-நீ கேட்ட வினாக்களுக்கு உரிய விடைகளை) யான் சொல்லப் புலவொடுக்கத்தோடு கேட்பாயாக.

பொழிப்பு: மாணாக்கனே, இறைவன் அருளிய ஆகமங்களில் உள்ளபடி இதனை யான் தெளிவாகச் சொல்ல நீ கேட்பாயாக.

## ஐம்பூத வடிவும் அவற்றாலாம் உடம்பும்

**4.** **நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி**
**ஏற்குமனல் முக்கோணம் எப்போதும் — ஆர்க்கும்**
**அறுகோணங் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா**
**உறுகாயம் ஆமிவற்றால் உற்று.**

கொ—கூ: பூமி நாற்கோணம்(நண்ணும்), புனல் மதியின் பாதி நண்ணும், அனல் முக்கோணம் ஏற்கும், கால் எப்போதும் அறுகோணம் ஆர்க்கும், ஆகாயம் வட்டம் (ஆர்க்கும்), ஆன்மா உற்று உறுகாயம் இவற்றால் ஆம்.

ப—ரை: பூமி நாற்கோணம் (நண்ணும்)-நிலம் நாற்கோணமாய் இருக்கும், புனல் மதியின் பாதி நண்ணும் -நீர் பாதிச் சந்திரனைப் போன்றதாய் (நிலத்தில்)அமைந்திருக்கும்; அனல் முக்கோணம் ஏற்கும் - தீ முக்கோண வடிவினைப் பொருந்தி நிற்கும்; கால் எப்போதும் அறுகோணம் ஆர்க்கும் - காற்று எக்காலமும் ஆறுகோணமாக இருக்கும்; ஆகாயம் வட்டம் (ஆர்க்கும்) - ஆகாயம் வட்ட வடிவத்தைப் பொருந்தும்; ஆன்மா உற்று உறுகாயம் இவற்றால் ஆம் - ஆன்மாவானது வேறுபடப் பொருந்தி நிற்கும் உடம்பு இந்த ஐம்பூதங்களினால் உண்டாகும்.

பொழிப்பு: நாற்கோணம் பாதிமதி முக்கோணம் அறுகோணம் வட்டம் என்னும் வடிவங்களே முறையே பொருந்தின நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்னும் தூல பஞ்ச பூதங்களினுல் உடம்பு ஆயது.

## ஐம்பூத நிறமும் எழுத்தும்

5. பொன்பார் புனல் வெண்மை பொங்கு மனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்றூமம் — என்பார்
எழுத்து லவரயவப் பாராதிக் கென்றும்
அழுத்தமாய் நிற்கு மது.

கொ—கூ: பார் பொன், புனல் வெண்மை, பொங்கும் அனல் சிவப்பு, வன்கால் கருமை, வளர்வான் தூமம், என்பார்; பார் ஆதிக்கு எழுத்து லவரய அ; அது என்றும் அழுத்தமாய் நிற்கும்.

ப—ரை: பார் பொன் - நிலம் பொன்நிறமானது, புனல் வெண்மை-நீர் வெண்மை நிறமானது. பொங்கும் அனல் சிவப்பு - மேல் எழுந்து எரிகின்ற தீ சிவப்பு நிறமானது, வன்கால் கருமை - வலிமை பொருந்திய காற்று கருமையானது, வளர் வான் தூமம் - மேன்மேலும் விரிந்து செல்வதாய்க் காணப்படும் ஆகாயம் புகை நிறமானது. என்பார் என்று பெரியோர் கூறுவார்கள், பார் ஆதிக்கு எழுத்து லவரய அ-நிலத்துக்கு லகரமும் நீருக்கு வகரமும் தீயுக்கு ரகரமும் காற்றுக்கு யகரமும் ஆகாயத்துக்கு அகரமும் பொருந்திய எழுத்துக்களாம். அது என்றும் அழுத்தமாய் நிற்கும் - அவ்வெழுத்துக்கள் எப்போதும் அவற்றை உறுதியாகப் பொருந்தி நிற்பனவாம்.

பொழிப்பு: நிலம் நீர் தீ காற்று ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களுக்கும் முறையே பொன், வெண்மை, சிவப்பு கருமை, தூமம் ஐந்தும் உரிய நிறங்களாம்; லவரயஅ ஐந்தும் அழுத்தமாய்ப் பொருந்திய எழுத்துக்களாம்.

## ஐம்பூத அடையாளம்

6. குறிகுலிசங் கோகநதங் கொள்சுவத்தி குன்ரு
அறுபுள்ளி யாரமுத விந்துப் — பிறிவின்றி
மண்புனல்தீக் கால்வானம் மன்னும் அடைவேயென்
ருெண்புதல்வா வாகமமோ தும்.



கொ—கூ: ஒண்புதல்வா, மண் புனல் தீ கால் வானம் (என்பவற்றின்) குறி அடைவே; குலிசம், கோகநதம், கொள் சுவத்தி, குன்ரு அறுபுள்ளி, ஆர் அமுத விந்து; (இவை) பிறிவு இன்றி மன்னும் என்று ஆகமம் ஓதும்.

ப—ரை: ஒண் புதல்வா - நல்ல மாணவனே, மண் புனல் தீ கால் வானம் (என்பவற்றின்) குறி: நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்பவற்றின் அடையாளம், அடைவே-முறையே, குலிசம் - வச்சிரமும், கோகநதம் - தாமரை மலரும். கொள்சுவத்தி - பொருந்திய சுவத்திகமும், குன்ரு அறுபுள்ளி - குறைவுபடாத ஆறுபுள்ளியும், ஆர் அமுத விந்து - பொருந்திய அமுதத் துளியும் ஆகும்; (இவை) பிறிவு இன்றி மன்னும் என்று ஆகமம் ஓதும் - இவை வேறுபடுதலின்றிப் பொருந்தி நிலைபெற்றிருக்கும் என்று ஆகமம் உரைக்கும்.

சுவத்திகம்-ஓர் அடையாளம். அது நான்கு விரலும் தம்முள் ஒட்டி நிமிரப்பெருவிரல் குந்த நிறுத்தி நிற்கும் பதாகைக் கை இரண்டினையும் மணிக்கட்டில் ஏற்றிவைக்கும் ஒரு வகை இணைப்புக் குறியாம்.

பொழிப்பு: நிலம் நீர் தீ காற்று ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களுக்கும் முறையே வச்சிரம், தாமரைமலர், சுவத்திகம், அறுபுள்ளி அமுதத்துளி என்பன அடையாளங்களாய்ப் பொருந்தி நிலைபெற்றிருக்கும்.

## ஐம்பூதத்துக்கும் அதிதெய்வமுந் தொழிலும்

7. பாராதி ஐந்துக்கும் பன்னுமதி தெய்வங்கள்
ஆரா ரயனுதி யைவராம் — ஓரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுத லைந்தும்
பழுதறவே பண்ணுவர்காண் பார்.

கொ—கூ: (மாணுக்கனே, பன்னும் பார் ஆதி ஐந்துக்கும் அதி தெய்வங்கள் ஆர் ஆர்? (எனில், அவர்:) அயன் ஆதி ஐவராம்; அவர்க்கு ஓர் ஓர் தொழில் சொல்லுங்கால் (அவை) தோற்றம் முதல் ஐந்தும் (ஆம்); (அவைகளை அவர்கள்) பழுது அறவே பண்ணுவர் காண் (-பார்.)

ப—ரை: பன்னும் பார் ஆதி ஐந்துக்கும் அதி தெய்வங்கள் ஆர் ஆர்-சொல்லப்படுகின்ற நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்னும் ஐம்பூதங்களுக்கும் மேலான தெய்வங்கள் யாவரெனில், அயன் ஆதி ஐவராம் - அவர்கள்

முறையே பிரமா விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்போராவர்; அவர்க்கு ஓர் ஓர் தொழில் சொல்லுங்கால் தோற்றம் முதல் ஐந்தும் ஆம் — அவர்களுக்குப் பொருந்திய ஒவ்வொரு தொழில் சொல்லுமிடத்து, அவை முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்துமாம்; பழுது அறவே பண்ணுவர் காண்பார் - அவர்கள் தத்தம் தொழில்களைப் பிழையறச் செய்வார்கள் என்று அறிவாயாக.

பொழிப்பு: நிலம் நீர் தீ காற்று ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களுக்கும் அதி தெய்வங்கள் முறையே பிரமா விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்போராவர். அவர்கள் படைத்தல் முதலிய ஐந்தொழில்களுள் ஒவ்வொரு தொழிலைப் பொருந்துவர்.

### இதுவுமது

8. *படைப்ப னயனளிப்பன் பங்கயக்கண் மாயன்*
*துடைப்ப னுருத்திரனுஞ் சொல்லில் — திடப்பெறவே*
*என்றுந் திரோபவிப்ப ரீசர் சதாசிவரும்*
*அன்றே யனுக்கிரக ராம்.*

கொ—கூ: சொல்லில், அயன் படைப்பன்; பங்கயக்கண் மாயன் அளிப்பன்; உருத்திரன் (+உம்) துடைப்பன்; ஈசர் என்றும் திடம்பெறவே திரோபவிப்பர்; சதாசிவர் (+உம்) அன்றே அனுக்கிரகர் ஆம்.

ப—ரை: சொல்லில் - ஒவ்வொருவருக்கும் அவ்வவர் தொழிலைப் பொருந்தச் சொல்லுமிடத்து; அயன் படைப்பன் - பிரமா படைத்தலைச் செய்வர்; பங்கயக்கண் மாயன் அளிப்பன் - செந்தாமரை மலர்போலும் கண்களையுடைய விஷ்ணு காத்தலைச் செய்வர்; உருத்திரன் துடைப்பன் - உருத்திரமூர்த்தி அழித்தலைச் செய்வர்; ஈசர் என்றும் திடம்பெறவே திரோபவிப்பர்-மகேசுவர மூர்த்தி எக்காலமும் நிச்சயமாகவே மறைத்தலைச் செய்வர்; சதாசிவர் அன்றே அனுக்கிரகராம்—சதாசிவமூர்த்தி அநாதியாகவே அருளலைச் செய்பவராம்.



பொழிப்பு: பிரமன் படைத்தலையும், விஷ்ணு காத்தலையும், உருத்திரன் அழித்தலையும், மகேசுவரர் மறைத்தலையும், சதாசிவர் அருளலையும் செய்வர்.

### ஐம்பூத இயல்பு

9. *மண்கடின மாய்த்திரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமாம்*
*ஒண்கனல்சுட் டொன்றுவிக்கும் ஓவாமல் — வண்கால்*
*பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கிலா காயம்*
*நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து.*

கொ—கூ: பார்க்கில், மண் கடினமாய்த் திரிக்கும்; வாரி குளிர்ந்து (+ஏ) பதமாம்; ஒண் கனல் சுட்டு ஒன்றுவிக்கும்; வண்கால் ஓவாமல் பரந்து சலித்துத் திரட்டும்; ஆகாயம் நிரந்தரமாய் நிறைந்து நிற்கும்.

ப—ரை: பார்க்கில் ஐம்பூதங்களின் இயல்பை ஆராய்ந்து பார்க்குமிடத்து, மண்கடினமாய்த் திரிக்கும்—நிலம் பொருள்களிடத்துக் கடினமான குணத்தைக் கொடுத்து நிற்கும் (இயல்பினையுடையதாம்). வாரி குளிர்ந்து (+ஏ) பதமாம் - நீர் விடயங்களிற் குளிர்ச்சியுடையதாய் நெகிழ்வு பொருந்தி நிற்கும் (இயல்பினையுடையதாம்); ஒண் கனல் சுட்டு ஒன்றுவிக்கும் - ஒளி பொருந்திய தீ விடயங்களில் சுடுதலைச் செய்து அவைகளைச் சேரச்செய்து நிற்கும் (இயல்பினையுடையதாம்); வண்கால் ஓவாமல் பரந்து சலித்துத் திரட்டும் - வளப்பம் பொருந்திய காற்று நீங்குதலின்றி எங்கும் பரந்து அசைந்து ஒலித்து விடயங்களைத் திரட்டி நிற்கும் (இயல்பினையுடையதாம்); ஆகாயம் நிரந்தரமாய் நிறைந்து நிற்கும் - ஆகாயம் எப்பொழுதும் எவ்விடயங்களும் நடைபெறுதற்கு இடங்கொடுத்து(அதனால் நிறைவுடையதாய் நிற்கும் (இயல்பினையுடையதாம்)

பொழிப்பு: நிலம் கடின குணத்தையும் நீர் குளிர்ச்சி பொருந்திய நெகிழ்ச்சியையும், தீ சுட்டு ஒன்றுவித்தலையும், காற்று எங்கும் பரந்து விடயங்களைத் திரட்டுதலையும், ஆகாயம் எல்லா விடயங்களும் நடைபெறு

தற்கு இடமாய் நிறைந்து நிற்றலையும் இயல்பாகப் பொருந்தியுள்ளன.

## ஐம்புலன்

**10.** **உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்றனக்குக்**
**கள்ளமிகும் ஐம்புலனுங் கட்டுரைக்கில் — மெள்ளவே**
**ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்**
**ஆசைதரும் ஐம்புலனே யாம்.**

கொ—கூ: உன்றனக்கு மாபூதம் உள்ளபடி ஓதினோம்; (இனி) கள்ளம் மிகும் ஐம்புலனும் மெள்ள (+ ஏ) கட்டுரைக்கில், ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம் (ஆம் இவை) ஆசைதரும் ஐம்புலன் (+ ஏ) ஆம்.

ப—ரை: உன்றனக்கு மாபூதம் உள்ளபடி ஓதினோம் - (மாணவகனே) இதுவரை உனக்குப் பஞ்ச பூதங்களையும் அவற்றின் உண்மை இயல்புகளையும் அவை பொருந்தியிருந்தபடி உரைத்தோம்; (இனி) கள்ளம் மிகும் ஐம்புலனும் மெள்ள (+ ஏ) கட்டுரைக்கில் - இனி நேரிய நெறியிற் செல்லாமல் இழிந்த கள்ள வழியிலே ஆன்மாவை இட்டுச் சென்று தீமை விளைக்கின்ற ஐந்து புலன்களைச் சொல்லுமிடத்து, ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம் ஆம் (இவை) - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் நாற்றமும் ஆகிய இவை, ஆசைதரும் ஐம்புலன் (+ ஏ) ஆம் - ஆன்மாவுக்கு நிலையற்ற உலகவிடயங்களில் ஆசையை உண்டாக்குகின்ற ஐம்புலன்களாம்.

பொழிப்பு: சத்தம் பரிசம் உருவம் இரசம் கந்தம் (ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்) என்பன ஐந்தும் ஐம்புலன்களாம். இவை ஆன்மாவுக்கு உலகவிடயங்களில் ஆசையை விளைவிப்பன.

## ஐம்பொறிகள்

**11.** **ஞானேந் திரியங்கள் நன்று வுரைக்கக்கேள்**
**ஊன மிகுபூதம் உற்றிடமா — ஈனமாம்**
**சத்தா தியையறியுந் தானஞ் செவிதோல்கண்**
**அத்தாலு மூக்கென் றறி.**



கொ—கூ: (மாணாக்கனே) ஞான இந்திரியங்கள் நன்று(க) உரைக்கக் கேள்; (அவை) ஊனம் மிகுபூதம் இடமா உற்று, ஈனம் ஆம் சத்தம் ஆதியை அறியும் தானம் (ஆகிய) செவி தோல் கண் அத்தாலு மூக்கு என்று அறி.

ப—ரை: ஞான இந்திரியங்கள் நன்று(க) உரைக்க கேள் - மாணாக்கனே (ஐம்புலன்களைச் சொன்னோம் இனி) ஐம்பொறிகளை நன்றாகச் சொல்லுகிறோம் கேட்பாயாக; (அவை) ஊனம் மிகுபூதம் இடமா உற்று - அவ்வைம் பொறிகளும் ஆன்மாவுக்குத் துன்பத்தை மிகுதியாகச் செய்கின்ற பஞ்ச பூதங்கள் இடமாகப் பொருந்தி நின்று, ஈனம் ஆம் சத்தம் ஆதியை அறியும் - இழிவு உடைய சத்தம் முதலிய புலன்களை அறிகின்ற, தானம் (ஆகிய) செவி தோல் கண் அத்தாலு மூக்கு என்று அறி - இடங்களாகிய காதும் தோலும் கண்ணும் நாக்கும் மூக்கும் என்று அறிவாயாக.

பொழிப்பு: ஐம்பொறிகள்: பஞ்ச பூதங்களிடமாகப் பொருந்தி நின்று சத்தம் முதலிய புலன்களை அறிகின்ற இடங்களாகிய காது தோல் கண் நாக்கு மூக்கு என்னும் ஐந்துமாம்.

## ஐம்பொறிகளின் புலன்களும் அவை பஞ்சபூதங்களில் தொடர்புறுமாறும்

**12.** **வானிடமா நின்றுசெவி மன்னும் ஒலியதனை**
**ஈனமிகுந் தோல்கால் இடமாக — ஊனப்**
**பரிசந் தனையறியும் பார்வையிற்கண் அங்கி**
**விரவியுரு வங்காணு மே.**

கொ—கூ: செவி வான் இடமா(க) நின்று மன்னும் ஒலி அதனை அறியும்; ஈனம் மிகும் தோல் கால் இடமா(க) (நின்று) ஊனப்பரிசம்தனை அறியும்; பார்வையில் கண் அங்கி விரவி (நின்று) உருவம் காணும் (+ ஏ).

ப—ரை: செவி வான் இடமா(க) நின்று மன்னும் ஒலி அதனை அறியும் - செவியானது ஆகாயத்தைப்

பொருந்தி நின்று விளங்குகின்ற சத்தத்தை அறியும்; ஈனம் மிகும் தோல் கால் இடமா(க) (நின்று) ஊனப்பரிசம் தனை அறியும் - இழிந்த தன்மையை அதிகமாகவுடைய தோலானது காற்றைப் பொருந்தி நின்று குறைவுபாடுடைய பரிசத்தை அறியும்! பார்வையில் கண் அங்கி விரவி (நின்று) உருவம் காணும் (+ஏ) - பார்க்கும் சக்தியுடையதாகிய கண் (நெருப்பின்) ஒளியைப்பொருந்தி உருவத்தை அறியும்.

பொழிப்பு: செவி ஆகாயத்தின் தொடர்பால் சத்தத்தையும், தோல் காற்றின் தொடர்பால் பரிசத்தையும், கண் ஒளியின் தொடர்பால் உருவத்தையும் அறியும்.

### இதுவுமது

13. நன்றாக நீரிடமா நாவிரதந் தானறியும்
பொன்றா மணம்மூக்குப் பூவிடமா — நின்றறியும்
என்றோது மன்றே யிறையா கமமிதனை
வென்றார்சென் றாரின்ப வீடு.

கொ—கூ: நா (தான்) நீர் இடமா(க) நின்று இரதம் நன்றாக அறியும்; மூக்கு பூ இடமா(க) நின்று பொன்றா மணம் அறியும்; என்று இறை ஆகமம் அன்றே ஓதும்; இதனை வென்றார் இன்பவீடு சென்றார்.

ப—ரை: நா (தான்) நீர் இடமா(க) நின்று இரதம் நன்றாக அறியும்—நாக்கு நீரைப் பொருந்தி நின்று இரதத்தை நன்கு அறியும்; மூக்கு பூ இடமா(க) நின்று பொன்றா மணம் அறியும்—மூக்கு நிலத்தைப் பொருந்தி நின்று கெடாத கந்தத்தை அறியும்; என்று இறை ஆகமம் அன்றே ஓதும்—என்று இவ்வாறு சிவாகமங்கள் அநாதியே உரைக்கும்; இதனை வென்றார் இன்ப வீடு சென்றார்—இப் பஞ்சப் புலன்களின் வழிச் செல்லாமல் அவற்றை வென்று நின்றவர்கள் பேரானந்தப் பேறுதவும் முத்தியைப் பெற்றோராவர்.

[''புலன் அடக்கித் தம் முதற்கண் புக்குறுவார் போதார், தலம் நடக்கும் ஆமை தக'' என்னும் திருவருட் பயனாசிரியர் கூற்றும், ''உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான், வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து." என்னும் வள்ளுவர் வாய்மொழியும் ஈண்டுப் பொருத்தி உணரத் தக்கன. புலன் வென்றார் தப்பாமலே வீட்டின்பந் துய்ப்பார் என்னுந் தெளிவுபற்றிவந்த துணிவு காட்டச் 'சென்றார்' என இறந்த காலத்தாற் கூறினார். — (மலர்மிசை ஏகினான்' என்புழிப்போல.)]

பொழிப்பு: நாக்கு நீரின் தொடர்பால் இரதத்தையும், மூக்கு நிலத்தின் தொடர்பால் கந்தத்தையும் அறியும். இவ்வைம்புலன்களையும் வென்றவர்கள் பேரின்பமடைவர்.



### கன்மேந்திரியங்களும் அவற்றின் இயல்பும்

14. கண்ணுதல்நூ லோதியிடுங் கன்மேந் திரியங்கள்
எண்ணும் வசனாதிக் கிடமாக — நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னுகுதம் உபத்த
மாக்கருது நாளு மது.

கொ—கூ: மன்னும் வாக்கு பாதம் பாணி குதம் உபத்தமா(க) நாளும் கருதும் கன்ம இந்திரியங்கள் (அது) - நாளும் எண்ணும் வசனம் ஆதிக்கு இடம் ஆக நண்ணியிடும், (என்று) கண்ணுதல் நூல் ஓதியிடும்.

ப—ரை: மன்னும் வாக்கு பாதம் பாணி குதம் உபத்தமா(க) நாளும் கருதும் கன்ம இந்திரியங்கள் (அது)—பொருந்திய வாக்கும் பாதமும் கையும் மலவாயிலும் (ஆண் பெண்) குறியும் என் எப்போதும் மதிக்கப்படுகின்ற கன்மேந்திரியங்களாகிய அவை ஐந்தும், எண்ணும் வசனம் ஆதிக்கு இடம் ஆக நண்ணியிடும் - நினைக்கப்படுகின்ற வசனித்தல் நடத்தல் தானஞ் செய்தல் கழித்தல் இன்புறுதல் ஆகிய ஐந்தினுக்கும் இடமாகப் பொருந்தி நிற்கும்; (என்று) கண்ணுதல் நூல் ஓதியிடும் என்று இங்ஙனம் இறைவனருளிய ஆகம நூல்கள் சொல்லும்.

[அது - ஒருமைப் பன்மை மயக்கம், வாக்கு - ஆகு பெயராய் வாயைக் குறித்து நின்றது. பாணி - கை. குதம் - மலவாயில் உபத்தம் - ஆண் பெண் குறி. கழித்தல் என்றது மல (சல) நீக்கம் செய்தல் என்றபடி.]

பொழிப்பு: வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் ஆகிய ஐந்து கன்மேந்திரியங்களும் முறையே வசனம் நடை தானம் கழிவு ஆனந்தம் என்பவற்றுக்கு இடமாக நிற்கும்.

### கன்மேந்திரியங்கள் தூல பஞ்சபூதங்களைப் பொருந்தி இயங்குமாறு

15. வாக்கா கா யம்இடமா வந்துவச னிக்குங்கால்
போக்காருங் காற்றிடமாப் புல்கியனல் — ஏற்கும்
இடுங்கை குதநீ ரிடமா மலாதி
விடும்பா ரிடமுபத்தம் விந்து.

கொ—கூ: வாக்கு ஆகாயம் இடமா(க) வந்து வசனிக்கும்; கால் காற்று இடமா(க)ப் போக்கு ஆரும்; கை அனல் புல்கி ஏற்கும், இடும்; குதம் நீர் இடமா(க) மலம் ஆதி விடும்; உபத்தம் பார் இடம் விந்து (விடும்),

ப—ரை: வாக்கு ஆகாயம் இடமா(க) வந்து வசனிக்கும்-வாய் ஆகாயம் இடமாகப் பொருந்தி நின்று வார்த்தை பேசும்; கால் காற்று இடமா(க)ப் போக்கு ஆரும் - பாதம் காற்றினிடமாகப் பொருந்தி நின்று நடத்தல் செய்யும்; கை அனல் புல்கி ஏற்கும், இடும்-கை தீயின் இடமாகப் பொருந்தி நின்று ஏற்றலும் ஈதலும் செய்யும்; குதம் நீர் இடமா(க) மலம் ஆதி விடும்-மலவாயில் நீரைப் பொருந்தி நின்று மலம் (சலம்) கழிக்கும்; உபத்தம் பார் இடம் விந்து (விடும்) - (ஆண் பெண்) குறி நிலத்தினிடமாகப் பொருந்தி நின்று தாதினை விட்டு இன்பமடையும்.

பொழிப்பு: வாக்கு ஆகாயத்தையும், கால் காற்றையும், கை அனலையும், குதம் நீரையும் உபத்தம் நிலத்தையும் பொருந்திநின்று முறையே பேசுதலையும் நடத்தலையும் ஈதலேற்றலையும் மலசல விமோசனத்தையும் விந்து விடுதலையும் செய்யும்.



### அந்தக் கரணங்களும் அவற்றினியல்பும்.

16. அந்தக் கரண மடைவே யுரைக்கக்கேள்
அந்தமனம் புத்தியுட னாங்காரம் — சிந்தையிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கா லெழுந்திருந்தங்
குற்றதுசிந் திக்கு முணர்.

கொ—கூ: (மாணவகனே) அந்தக்கரணம் அடைவே உரைக்கக் கேள், அந்த மனம் புத்தி ஆங்காரம் உடன் சிந்தை இவை (அந்தக்கரணமாம்); இவற்றுள்) (மனம்) பற்றியது (புத்தி) நிச்சயித்து (ஆங்காரம்) பல்கால் எழுந்து இருந்து (ஊக்குவிக்க) (சித்தம்) அங்கு உற்றது சிந்திக்கும் (என்று நீ) உணர்.

ப—ரை: அந்தக்கரணம் அடைவே உரைக்கக் கேள் - மாணவகனே, (கன்மேந்திரியங்களைப்பற்றிச் சொன்னோம் இனி) அந்தக்கரணங்களைப்பற்றி முறையே சொல்லுகிறோம் கேட்பாயாக; அந்த மனம் புத்தி ஆங்காரம் உடன் சிந்தை இவை (அந்தக்கரணமாம்) அந்த மனம் புத்தி அகங்காரம் என்பவற்றுடன் சித்தமும் சேர இந்நான்கும் அந்தக்கரணங்களாகும்; (இவற்றுள் மனம்) பற்றியது - இந் நான்கினுள் மனமானது விரும்பிச் சேர்த்துக்கொண்ட விடயத்தை,(புத்தி) நிச்சயித்து-புத்தி ஆராய்ந்து வரையறை செய்து உறுதியாய் நிற்க, (ஆங்காரம்) பல்கால் எழுந்து இருந்து - அகங்காரம் இதனைச் செய்வேன் எனப் பலமுறையும் எழுந்திருந்து ஊக்குவிக்க, (சித்தம்) அங்கு உற்றது சிந்திக்கும் (என்று நீ) உணர் - சித்தம் அதன் பயனாய் அங்கே நிகழ்ந்த விடயத்தைச் சிந்தித்து முடிந்த முடிபாக ஏற்றுக்கொள்ளும் என்று நீ உணர்வாயாக.

### ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கு

17. ஓதியிடும் நாலாறு முற்றான்ம தத்துவமென்
றோதி யருணூல் அறையுங்காண் — தீதறவே
வித்தியா தத்துவங்கள் தன்மை விளம்பக்கேள்
உத்தமனே நன்றா வுனக்கு.

கொ—கூ: உத்தமனே, (முன்) ஓதியிடும் நாலாறும் உற்று ஆன்ம தத்துவம் என்று ஆதி அருள் நூல் அறையும்காண்; (இனி) வித்தியா தத்துவங்கள் (அவற்றின்) தன்மை தீது அறவே உனக்கு விளம்ப (நீ) நன்று(க) உற்றுக்கேள்.

ப—ரை: உத்தமனே - சிறந்த மாணவகனே, ஓதியிடும் - முன்னே சொல்லப்பட்ட, நாலாறும் உற்று - இருபத்துநான்கு தத்துவங்களும் பொருந்தி; ஆன்மதத்துவம் என்று ஆதி அருள் நூல் அறையும் காண் - ஆன்ம தத்துவம் ஆகிய பெயரைப் பெறும் என்று முதல்வன் ஆகிய இறைவன் அருளிய ஆகம நூல்கள் உரைக்கும் என நீ அறிவாயாக; வித்தியாதத்துவங்கள் தன்மை-இனி வித்தியா தத்துவங்களையும் அவற்றின் இயல்புகளையும். தீது அறவே உனக்கு விளம்ப-குற்றமில்லாதபடி உனக்கு (நான்) சொல்ல, நன்று(க) உற்றுக் கேள் - நீ நன்கு கவனித்துக் கேட்பாயாக.

நிலம் நீர் காற்று ஆகாயம் ஆகிய பூதங்கள் ஐந்தும்; ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம்என்னும் புலன்களைந்தும்; செவி, தோல், கண், நாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும்; மனம், புத்தி அகங்காரம் சித்தம் ஆகிய அந்தக்கரணங்கள் நான்கும் ஆக ஆன்மதத்துவங்கள் இருபத்துநான்காம். இவை ஆன்மாவோடு சம்பந்தமாயிருத்தல்பற்றி ஆன்மதத்துவம் எனவும் அனுபவிக்கப்படும் பொருள்களாயிருத்தல் பற்றி போக்கிய காண்டம் எனவும், ஆன்மாவுக்கு இராசதம் தாமதம் சாத்துவிகம் ஆகிய முக்குணங்களினாலே சுகதுக்க மோகங்களை உணடாக்குதல்பற்றி அசுத்த தத்துவம்எனவும், வழங்கப்பெறும். (போக்கியம்- அநுபவிக்கப்படும் பொருள், காண்டம் - கூட்டம், திரள்).

பொழிப்பு: முற்கூறப்பட்ட இருபத்துநான்கும் ஆன்ம தத்துவங்களாம். இனி வித்தியா தத்துவங்கள் கூறுவோம்.



## வித்தியா தத்துவங்கள் ஏழு

18. *காலம் நியதி கருதுங் கலைவித்தை*
*ஏலவிரா கம்புருட னேமாயை — மாலறவே*
*சொன்னோ மடைவாகச் சொன்னவிவை தம்முண்மை*
*உன்னி உரைக்கும்நா முற்று.*

கொ—கூ: காலம் நியதி கருதும் கலைவித்தை இராகம் புருடன் (+ஏ) மாயை (என்னும் தத்துவங்கள் ஏழையும்) மால் அற (+ஏ) அடைவாக ஏலச் சொன்னோம்; (இங்ஙனம்) நாம் சொன்ன இவை தம் உண்மை(யை இனி) உற்று உன்னி (அடைவாக) உரைக்கும்.

ப—ரை: காலம் நியதி கருதும் கலைவித்தை இராகம் புருடனே மாயை - காலமும் நியதியும் கருதப்படுகின்ற கலையும் வித்தையும் இராகமும் புருடனும் மாயையும் ஆகிய வித்தியாதத்துவங்கள் ஏழையும், மால் அறவே அடைவாக ஏலச் சொன்னோம் - (உனது) மயக்கம் அகலும்படி முறையே பொருந்துமாறு கூறினோம்; நாம் சொன்ன இவை தம் உண்மை உற்று உன்னி (அடைவாக) உரைக்கும் இனி, நாம் இங்ஙனம் கூறிய இவைகளின் உண்மை இயல்புகளைப் பொருந்த வாராய்ந்து நோக்கி (அவ்வியல்புகளை) முறையாகச் சொல்லுவோம்.

'ஏ' இரண்டும் அசை

பொழிப்பு: வித்தியா தத்துவங்கள், காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்பனவாம். இவற்றின் உண்மை இயல்புகளை இனிக் கூறுவோம்.

### வித்தியா தத்துவங்களின் இயல்புகள்.

19. *எல்லை பலம்புதுமை எப்போதும் நிச்சயித்தல்*
*அல்லல் தருங்கிரியை ஆன்மாவுக்(கு) — ஒல்லை*
*அறிவாசை ஐம்புலனும் ஆரவருங் காலம்*
*குறியா மயக்கென்று கொள்*

கொ—கூ: ஆன்மாவுக்கு எல்லை பலம் புதுமை (என்பவற்றைக் காலதத்துவம் வரையறை செய்யும் எனவும்), (நியதி தத்துவம்) எப்போதும் நிச்சயித்தல் (செய்யும் எனவும்), (கலாதத்துவம் அல்லல் தரும் கிரியை (யைஎழுப்பும் எனவும்), (வித்தியாதத்துவம் - வித்தை) ஒல்லை அறிவு (விளக்கும் எனவும்), (இராக தத்துவம்) ஆசை (தரும் எனவும்), ஐம்புலனும் ஆரவரும் காலம் (அதுபுருட தத்துவமாம் எனவும்), (மாயை) குறியா மயக்கு (செய்யும்) என்றும் கொள்.

ப—ரை: ஆன்மாவுக்கு எல்லை பலம் புதுமை - ஆன்மாவுக்கு இறந்தகாலத் தெல்லையையும் நிகழ் காலத்துப் பலத்தையும் எதிர் காலத்துப் புதுமையையும் காலதத்துவம் வரையறை செய்து நிற்கும் எனவும், எப்போதும் நிச்சயித்தல் நியதிதத்துவம் (அவ்வான்மா முன்னே செய்த) கன்மங்களை அநுபவிக்கும்படி எக்காலமும் நிச்சயம்பண்ணி நிறுத்தும் எனவும், அல்லல் தரும் கிரியை - காலதத்துவம் ஆணவத்தைச் சிறிதே நீக்கி விடயங்களைப் பொருந்தும்படி அவ்வான்மாவின் கிரியா சத்தியை எழுப்பி நிற்கும் எனவும், ஒல்லை அறிவு - வித்தியாதத்துவம் விடயங்களைப் பொருந்துவதற்குரிய அறிவை ஆன்மாவிடத்தில் விளக்கிநிற்கும் எனவும், ஆசை-இராக தத்துவம் (கன்மத்துக்கிடாகப் பெற்ற போகங்களில் அநுபவித்தவற்றைச் சிறிதெனக்காட்டி, அநுபவியாதனவற்றைப் பெரிதாக்கி அவற்றிலே) ஆசையைமிகுவிக்கும் எனவும், ஐம்புலனும் ஆரவருங்காலம் - தன்னிடத்துப் பொருந்துகின்ற வினைப்போகங்களை) ஐம்புல உணர்வால் ஆன்மா பொருந்தி அனுபவிக்கக் கருதும் காலத்திலே அது புருடதத்துவமாம் எனவும், குறியாமயக்கு என்று கொள் - மாயா தத்துவம் ஒன்றை நினைக்கவொட்டாமல் மயக்கத்தைச் செய்யும் எனவும் அறிந்துகொள்வாயாக.

இந்தத் தத்துவங்களின் இயல்புகள் இங்ஙனமாதலைச் சிவப்பிரகாசம் 39, 40, 41-ம் செய்யுள்களானும் அறிக, இவை ஆன்மாவுக்குச் சற்றே அறிவு விளக்கம் செய்தல் பற்றி வித்தியாதத்துவம் எனவும், போகத்தைக் கொடுத்து அனுபவிக்கச் செய்வது பற்றிப் போககாண்டம் எனவும், அங்ஙனம் செய்யும் உதவி பற்றிப் போசயித்திருகாண்டம் எனவும், சிற்றறிவு சிறுதொழில் களை விளக்குவதற்குச் சாதனமாயமைந்து சுத்தமாயும் சூக்கும தேகத்தின் வழிக் குணரூபமாய்ச் சுக துக்க மோகங்களை உண்டாக்கி நின்று அசுத்தமாயும் அமைதல் பற்றிச் சுத்தாசுத்த தத்துவம் எனவும், அங்ஙனம் சுத்தமும் அசுத்தமும் கலந்து நின்றமைபற்றி மிச்சிராத்துவா எனவும் வழங்கப்படும். (போசயித்திரு - அநுபவிப்பிப்பது, புசிப்பிப்பது; மிச்சிரம் - கலப்பு; அத்துவா - வழி; அதுஆன்மாவுக்குக் கன்மமேற்றுவதற்கும் பரகதி அடைவதற்கும் ஆய வழி என்றபடி.)



பொழிப்பு: காலதத்துவம் எல்லை, பலம், புதுமை என்பவற்றை வரையறை செய்யும். நியதி தத்துவம் கன்மத்தை நிச்சயித்து நிறுத்தும். கலாதத்துவம் ஆணவத்தைச் சிறிது நீக்கிக் கிரியையை எழுப்பும். வித்தியா தத்துவம் அறிவை எழுப்பி விளக்கி நிற்கும். இராகதத்துவம் அநுபவியாத விடயத்தில் ஆசையை எழுப்பும். புருடதத்துவம் விடயத்தில் அழுந்துதலைச் செய்யும். மாயாதத்துவம் மயக்கஞ்செய்து நிற்கும்.

சிவதத்துவங்கள் ஐந்து (சுத்த தத்துவங்கள்)

20. வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினேம்
சுத்தமாந் தத்துவங்கள் சொல்லக்கேள்—நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம்நற்
சத்திசிவங் காணவைகள் தான்.

கொ கூ: வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினேம்; (இனி) சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள்; அவைகள் (தான்) நித்தமாம் சுத்தவித்தை, ஈசுரம், பின் சொல்லும் சதாசிவம், நல் சத்தி, சிவம் காண்.

ப—ரை: வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினேம் - சுத்தாசுத்த தத்துவங்களாகிய வித்தியா தத்து

வங்கள் ஏழையும் முன்பு சொன்னோம்; சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் - இனி சுத்தமாகிய (சிவ) தத்துவங்களைச் சொல்லுகிறோம் கேட்பாயாக; அவைகள் (தான்) நித்தமாம் சுத்தவித்தை-அவைகளாவன நித்தியமாய் இருங்கின்ற சுத்தவித்தையும், ஈசுரம்-மகேசுரமும், பின்சொல்லும் சதாசிவம் - பின்னே கூறப்படும் சாதாக்கியமும், நல்சத்தி சிவம்காண் - நல்லசத்தியம் (— விந்துவும்), சிவமும் (—நாதமும்) ஆகிய ஐந்துமாகும் என்று அறிவாயாக.

தான்—அசை

பொழிப்பு: சுத்த தத்துவங்களாகிய சிவதத்துவங்கள் சுத்தவித்தை, மகேசுரம்,சாதாக்கியம்,சத்தி, சிவம் என்னும் ஐந்துமாம்.

### சிவ தத்துவங்களின் இயல்புகள்.

21. சுத்தவித்தை ஞானமிகுந் தொன்மையா மீசுரந்தான்
அத்தன் தொழிலதிக மாக்கியிடும்—ஒத்தலிவை
சாதாக் கியமென்றுஞ் சத்தி சிவங்கிரியை
ஆதார ஞானவுரு வாம்.

கொ—கூ: சுத்தவித்தை ஞானம் மிகும், தொன்மையாம் ஈசுரம் (தான்) அத்தன் தொழில் அதிகம் ஆக்கியிடும்; சதாசிவம் இவை ஒத்தலாம்; சத்தி என்றும் கிரியை (ஆம்); சிவம் ஆதார ஞான உருவாம்.

ப—ரை: சுத்தவித்தை ஞானம் மிகும் - சுத்தவித்தையானது கிரியை குறைந்து ஞானம் கூடியதாய் அமைந்திருக்கும்; தொன்மையாம் ஈசுரம்தான் அத்தன் தொழில் அதிகம் ஆக்கியிடும் - பழைமையதாகிய ஈசுர (மகேசுர) தத்துவம் ஞானம் குறைந்து கிரியை அதிகரித்ததாய் இருக்கும்; சாதாக்கியம் இவை ஒத்தல் ஆம் - சாதாக்கிய (சதாசிவ) தத்துவம் ஞானமும் கிரியையும் ஒத்த அளவில் பொருந்தியிருப்பதாம்; சத்தி என்றும் கிரியை (ஆம்) - சத்தி (- விந்து) தத்துவம் எப்போதும் கிரியை உடையதாய் இருக்கும்; சிவம் ஆதார ஞான



உருவாம் - சிவ (நாத) தத்துவம் (யாவும் நடைபெறுவதற்கு) ஆதாரமான ஞான உருவமாக இருக்கும்.

தான்—அசை

இந்தத் தத்துவங்களின் இயல்புகள் இங்ஙனமாதலைச் சிவஞான சித்தியாரில் "ஞானமேயானபோது" (சுபக்; சூத். 1 செய்; 65.) "வித்தையோடீசர்" (சுபக்; சூத்: 1, செய்: 66) என்னும் தொடக்கத்துச் செய்யுள்களாலுமறிக.

சுத்த தத்துவங்கள் ஐந்தும் அவற்றிலமைந்த ஆன்மாக்களுக்கு எல்லாவற்றையும் அறியும் தன்மையையும், எல்லாவற்றையும் செய்பவனது தன்மையையும் தருதல் பற்றிச் சுத்ததத்துவம் எனவும், சுத்தாத்துவா எனவும், அசுத்த தத்துவங்களைச் செலுத்துதல்பற்றிப் பிரேரகாகாண்டம் எனவும் கூறப்படும். இவை ஐந்தும் சடமாயினும் சிற்சத்திக்குச் சுதந்திரவடிவங்களாதலால் சைதன்னியம் எனவும், ஏனைய முப்பத்தொன்றனுள் புருடதத்துவம் சார்ந்ததன் வண்ணமாதல் பற்றிச் சிதசித்து எனவும், அஃதொழிந்த முப்பதும் அசித்தெனவும் படும். (சித்தி: சூத், 2, செய்: 69 பார்க்க; பிரேரகம் - செலுத்துதல்; காண்டம் - கூட்டம்; சைதன்னியம் - அறிவுடைமை; சித்து - அறிவுடையது; சித்து+அசித்து=சிதசித்து - அறிவுள்ளதும் இல்லதுமானது; அசித்து - அறிவற்றது.)

இதுவரை கூறப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களோடும் ஆன்மா கூடி மயங்கிப் பெருந்துன்பத்தை அநுபவித்தும், தூல சரீரம் அழியுங்காலத்துக் கலை முதலிய தத்துவங்களாலாகிய சூக்கும சரீரத்தைப் பொருந்திச் சென்று சுவர்க்கம் நரகம் முதலிய இடங்களில் பூதாசாரம் பூதம் முதலிய சரீரங்களை எடுத்து வினைப் பயன்களை அநுபவித்துக் கழித்தும், மேலும் இப் பூமியில் வந்து பிறக்கும். இவ்வுண்மையைச் சிவப்பிரகாசம் 46ம் செய்யுளானறிக.

பொழிப்பு: சுத்தவித்தை ஞானமேறிக் கிரியை குறைந்தும், ஈசுரம் கிரியை ஏறி ஞானம் குறைந்தும், சாதாக்கியம் ஞானம் கிரியை இரண்டும் ஒத்த அளவிற் பொருந்தியும் இருக்கும் இயல்பின. சத்தி என்றும் கிரியையை உடையதாயிருப்பது. சிவம் ஞானவுருவாம் இயல்பினது.

### ஆணவமும் கன்மமும்

22. ஆறாறு தத்துவமுஞ் சொன்னோ மடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக் — கூறில்
அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்
குறியா வினையென்று கொள்.

கொ—கூ: ஆறாறு தத்துவமும் அடைவாகச் சொன்னோம்; (இனி) மாறா மலமிரண்டும் சொல்ல, வா; (அவற்றைக்) கூறில், அறியாமை ஆணவம் (எனவும்), சுகம் துக்கம் குறியா நீ ஆன வினை என்றும் கொள்

ப—ரை: ஆறாறு தத்துவமும் அடைவாகச் சொன்னோம் - (மும்மலங்களுள் மாயையிலிருந்து உளவாகும்) முப்பத்தாறு தத்துவங்களையும் முறையாக உரைத்தோம்; மாறாமலமிரண்டும் சொல்ல, வா - (இனி) விட்டு நீங்காமல் இருக்கின்ற (ஏனைய) இரண்டு மலங்களையும் சொல்லுகிறோம், வந்து கேட்பாயாக; கூறில் அம் மலங்களைக் கூறுமிடத்து, அறியாமை ஆணவம் - ஆன்மாவினிடத்து அநாதியே அறியாமையைச் செய்து நிற்பது ஆணவமலம் எனவும், சுகம் துக்கம் குறியா நீ ஆனவினை என்று கொள் - இன்பம் துன்பம் ஒன்றையும் (உன்னின் வேறாய்) நினையாமல் (அவ்வின்ப துன்ப உருவமே) நீயாய் (அவற்றின் செயலை உன் செயலாய்ப்) பொருந்தி இருப்பதுதான் கன்ம மலம் எனவும் அறிந்து கொள்வாயாக.

சிவப் பிரகாசத்தில் ''இருள் ஒளிர இருண்ட மோகமாய் . . . . அறிவு முழுதினையும் மறைக்கும்'' (செய். 20) எனவும் திருவருட்பயனில் ''பன்மொழிகள் என்னுண



ரும் பான்மை தெரியாத தன்மை இருளார் தந்தது.'' (இருண்மல. செய். 6. எனவும் ஆணவவியல்புரைத்தமை காண்க. கன்மம் புத்தி தத்துவம் பற்றுக்கோடாய்க் கலந்து, ஆன்மாவைத் தன்மயமாக்கி அதனைவிட்டு நீங்காததாய், மனம் வாக்குக் காயங்களினால் செய்யப்படுவதாய், இன்பதுன்பமாகிய பயனைத் தரும் புண்ணிய பாவ வடிவாயமையும் என்பதை ''நண்ணியிடும் உருவதனுக் கேதுவாக . . . .'' (செய். 28.) என்னும் சிவப்பிரகாசச் செய்யுளானறியத்தக்கது.

பொழிப்பு: மும்மலங்களுள் (மாயையை) முப்பத்தாறு தத்துவங்களையும் முன் சொன்னோம். ஏனைய இரண்டு மலங்களாவன ஆணவம் கன்மம் என்பனவாம்.

### மாணவகன் வேண்டுகோள்

23. ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
மாறா அருளால் வகுத்துரைத்தீர் — வேறாகா
என்னை எனக்கறியக் காட்டீ ரிவைகண்டேன்
உன்னரிய தேசிகரே யுற்று.

கொ—கூ: உன்ன அரிய தேசிகரே, ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும் மாறா அருளால் வகுத்து உரைத்தீர்; இவை உற்றுக் கண்டேன்; (இனி இவற்றின்) வேறு ஆகா என்னை (நான்) அறிய எனக்குக் காட்டீர்.

ப—ரை: உன்ன அரிய தேசிகரே - அபக்குவிகளால் நினைத்தற்கு அரிய ஞானாசாரியரே, ஆறாறு தத்துவமும் - முப்பத்தாறு தத்துவங்களையும், ஆணவமும் - ஆணவ மலத்தையும், வல்வினையும் - வலிய கன்ம மலத்தையும், மாறா அருளால் வகுத்து உரைத்தீர் - என்றும் விட்டு நீங்காத பெருங்கருணையினாலே வகைப்படுத்திச் சொல்லியருளினீர், இவை உற்றுக் கண்டேன் - இந்த மும்மலங்களையும் பொருந்தி அறிந்துகொண்டேன்; வேறு ஆகா என்னை அறிய எனக்குக் காட்டீர் - இனி, (இம்மலங்க

ளைப் பற்றியதால்) இவற்றிற்கு வேறு ஆகாமல் (இவைக ளேயாய்) ஒன்றுபட்டு இருக்கின்ற என்னுடைய சொரூப இலக்கணத்தை நான் அறியும்படி எனக்குக் காட்டியரு ளுவீராக.

இதுவரை ஆறாறு தத்துவமும், அன்றே தான் மாறா ஆணவமும், வினையும் கூறுமுகத்தால் மாணவகனுக்குப் பாசதரிசனம் காட்டிய ஆசிரியர் இனி, மேல் வரும் மூன்று செய்யுள்களால் ஆன்மதரிசனம் பண்ணுவிக் கின்றார்.

பொழிப்பு: தேசிகரே, நீர் இதுபரியந்தம் மும்ம லங்களைப் பற்றிக்கூறக் கேட்டறிந்துகொண்டேன்; இனி 'நான்' ஆகிய ஆன்மாவின் சொரூப இலக்கணத்தைக் கூறியருளுவீராக.

### சார்ந்ததன் வண்ணமாம் ஆன்மா சதசத்து

**24.** நன்றா உரைக்கக் கேள் நல்லசித்தின் முன்னசித்திங்(கு)
ஒன்றாது சித்தசித்தை ஓராது — நின்றிவற்றை
அன்றே பகுத்தறிவ தான்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதும் குறித்து.

கொ — கூ: நன்றா உரைக்கக்கேள்; நல்ல சித்தின் முன் அசித்து இங்கு ஒன்றாது; சித்து அசித்தை ஓராது; இவற்றை அன்றே நின்று பகுத்து அறிவது ஆன்மாவே; என்று மறை குன்றாமல் குறித்து ஓதும்.

ப — ரை: நன்றா உரைக்கக் கேள் – (மாணவகனே நீ வினவிய ஆன்ம தரிசனத்தை) நன்றாகச் சொல்லுகிறோம் கேட்பாயாக; நல்ல சித்தின்முன் அசித்து இங்கு ஒன் றாது – சிறந்த அறிவுடைப் பொருளாகிய சிவத்தின் முன் அறிவில் பொருளாகிய பாசம் கூடி நில்லாது; சித்து அசித்தை ஓராது – (அச்) சிவம் பாசத்தைச் சுட்டி அறிய வேண்டியதில்லை; இவற்றை அன்றே நின்று பகுத்து அறி வது ஆன்மாவே – சித்தாகிய சிவத்தையும் அசித்தா



கிய பாசத்தையும் அநாதியாகவே பொருந்தி நின்று (சார்ந்ததன் வண்ணமாய் அவ்வவற்றை) விசாரித்து அறியுந் தன்மையுடையது ஆன்மாவேயாகும்; என்று மறை குன்றாமல் குறித்து ஓதும் – என வேதங்கள் (அவற் றைக்) குறைவுபாடின்றிச் சுட்டியுரைக்கும்.

வேதாந்தத் தெளிவே சைவசித்தாந்தம் ஆதலால் 'மறை......ஓதும்' என்றார். இறைவன் எவ்விடத்திலும் எப்பொருளிலும் நீக்கமற வியாபித்துள்ளவன்; அவனை அகன்று எங்கும் எவையும் இன்று; எனவே, ஆணவம் முதலிய பாசங்களும் அவனை அகன்று இல்லை. அங்ஙனம் வியாபித்துள்ள அவன் அவற்றை அவற்றிற்குப் புறம்பே நின்று சுட்டி அறியவேண்டியதில்லை. ஆதலால் "சித்து அசித்தை ஓராது" என்றார். சித்து ஆகிய சிவம் ஒளி போன்றது; அசித்து ஆகிய பாசம் இருள் போன்றது. ஒளிமுன் இருள் கூடிக் கலந்து நிற்பதில்லை; ஒளியை அறிவதுமில்லை. அங்ஙனமே சித்தின் முன் அசித்தும் ஒன்றாது; சித்தை அறியவும் மாட்டாது என்க.

இதனைச் "சத்தசத்தைச் சாராது அசத்து அறியா தங்கண் இவைஉற்ற சதசத்தா முயிர்" (திருவருட்பயன். உயி. செய்7.) எனவும், "யாவையும் சூனியம் ... ... ... ... இருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா" (சிவஞானபோ. சூத்.7) எனவும் வருவனவற்றாலுமறிக.

பொழிப்பு:— சித்து அசித்தை அறிந்து அநுபவி யாது; அசித்து சித்தை அறியவும் அநுபவிக்கவும் மாட் டாது; ஆகவே இவ்விரண்டினையும் அறிந்து அநுபவிக் கும் இயல்புடையது ஒன்று உளது. அது சார்ந்ததன் வண்ணமாகும் இயல்புடைய ஆன்மாவேயாம்.

### தத்துவங்கள் ஆன்மாவன்று

**25.** தத்துவங்க ளாறாறுந் தம்மைத்தா மென்றறியா
எத்தன்மை யென்னி லியம்பக்கேள் — சுத்தமாம்
ஆறு சுவையு மறியாது தன்னைத்தான்
கூறி லவையிவைபோற் கொள்.

கொ—கூ:- ஆறாறு தத்துவங்களும் தம்மைத் தாம் என்று அறியா; (இது) எத்தன்மை என்னில் இயம்ப (நீ) கேள்; கூறில், சுத்தமாம் ஆறு சுவையும் தன்னைத்தான் அறியாது; இவைபோல் அவைகொள்.

ப—ரை: ஆறாறு தத்துவங்களும் தம்மைத் தாம் என்று அறியா - முப்பத்தாறு தத்துவங்களும் அறிவில் பொருள்களாதலால் அவை தம்முடைய சொரூபத்தை (எக்காலத்திலும் எவ்வகையாலும்) அறியமாட்டா; எத்தன்மை யென்னில் - இது எந்த முறைமை போன்றது என வினவில், இயம்பக்கேள் - சொல்லுகிறேம் கேட்பாயாக, கூறில் - அம் முறைமையைக் கூறுமிடத்து, சுத்தமாம் ஆறு சுவையும் தன்னைத்தான் அறியாது - தூய்மையாய் இருக்கின்ற அறுவகைச் சுவைகளும் தாம் இன்ன இன்ன சுவையுடையோம் எனத் தம்மை அறியமாட்டா, இவைபோல் அவைகொள் - இவ்வியல்புடைய சுவைகளைப் போலத் தத்துவங்களும் தம்முடைய சொரூபத்தை அறியமாட்டா என நீ உணர்ந்து கொள்ளுவாயாக.

''தத்துவங்கள் தம்மையேனும் பிறவற்றையேனும் அறிவித்தக்காலும் அறியமாட்டாமையால், அவை அறிவிக்க அறியும் தன்மையுடைய ஆன்மாவன்று'' என்பது இச் செய்யுளால் வலியுறுத்தப்பட்டது.

பொழிப்பு:- தம்மியல்புணராது நின்ற அறுவகைச் சுவைகளை ஒத்தனவே, அசத்தாகிய தத்துவங்களென அறிவாயாக.

தத்துவங்களுக்கு வேறாய் ஆன்மா உண்டு

26. ஆறு சுவையு மருந்தி யவைதம்மை
வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல் — ஆறாறும்
ஒன்றொன்று நாடியுணர்ந் தோதிலதி லுற்றறிவாய்
நின்றபொருள் தானேகாண் நீ.

கொ—கூ: (ஆன்மா எது என்பதை) ஓதில், (ஆறு வகைச் சுவைக்கும்) வேறு (ஆகிய) ஒருவன் ஆறு சுவையும் (ஒன்று ஒன்றாய்) அருந்தி (நாடி உணர்ந்து) அவை தம்மைக் கூறியிடும் மேன்மைபோல், ஆறு ஆறும் ஒன்று ஒன்றாய் நாடி உணர்ந்து, அதில் உற்று, அறிவாய் நின்ற பொருள் தானே நீ (என்று) காண்.



ப—ரை: ஓதில்–ஆன்மா எது என்பதை உரைக்குமிடத்து, வேறு ஒருவன்–(ஆறுவகைப்பட்ட சுவைகளுக்கும்) வேறுபட்டு நின்ற ஒருவன், ஆறு சுவையும் அருந்தி -(அவ்) ஆறு சுவைகளையும் (ஒன்று ஒன்றாகப்) புசித்து, கூறியிடும் மேன்மைபோல் - (ஆராய்ந்து அறிந்து) இது கைக்கிறது; இது கார்க்கிறது; இது கூர்க்கிறது; இது துவர்க்கிறது; இது புளிக்கிறது; இது இனிக்கிறது எனச் சொல்லுந்தன்மை போல, ஆறு ஆறும் - முப்பத்தாறு தத்துவங்களையும், ஒன்று ஒன்று நாடி உணர்ந்து - ஒவ்வொன்றாக விசாரித்து அறிந்து, அதில் உற்று - அவ்வநுபவத்தில் பொருந்தி, அறிவாய் நின்ற பொருள் தானே நீ காண் - அறியும் இயல்பினதாய் நின்ற பொருள்தான் நீ ஆகிய ஆன்மாவாம்.

பொழிப்பு: ஒருவன் ஆறு சுவைகளையும் ஒவ்வொன்றாகப் புசித்து அவற்றின் இயல்புகளைக் கூறுந்தன்மை போல, முப்பத்தாறு தத்துவங்களையும் விசாரித்தறியும் இயல்பினதாய் நின்ற பொருளே ஆன்மாவாம்.

அறிவுக்கு அறிவாய் நின்று அறிவிப்பது பதி

27. குன்றா வருளாலே கூறினீ ரென்வடிவு
பொன்றாத நும்முருவம் போதியீர் — நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமாப் போலே யுனதறிவின்
நண்ணியறி வித்திடுவோம் நாம்.

கொ—கூ: ''(தேவரீர்) குன்றா அருளாலே என் வடிவு கூறினீர்; (இனி) பொன்றாத நும் உருவம் போதியீர்;'' (என மாணவகன் வினவியதற்கு ஞானாசிரியர்:) ''அருக்கன் நின்று (பொருள்களைக்) கண்ணுக்குக் காட்டுமா போலே, நாம் உனது அறிவில் நண்ணி அறிவித்திடுவோம்.'' (என்றார்)

ப—ரை: குன்றா அருளாலே என் வடிவு கூறினீர்- தேவரீர் என்றும் குறைவுபடுதலில்லாத பேரருளினாலே அடியேனுடைய சொரூபத்தை, அருளிச் செய்தீர்; பொன்

றாத நும் உருவம் போதியீர் - இனி, கெடாத தேவரீருடைய சொரூபம் எப்படிப்பட்டதென்பதை அடியேனுக்கு அருளிச் செய்யவேண்டும்; (என மாணவகன் வினா வினானாக ஆசிரியர்:) அருக்கன் நின்று கண்ணுக்குக் காட்டுமா போலே - சூரியனது ஒளி நிலைபெற்று நின்று இருளை நீக்கிக் கண்ணொளியையும் பிற பொருள்களையும் காட்டுவது போல, நாம் உனது அறிவில் நண்ணி அறிவித்திடுவோம் - நாம் உனது அறிவிலே (அறிவுக்கறிவாய்ப்) பொருந்தி நின்று பாசம் பசுபதி ஆகியவற்றின் உண்மை இயல்புகளை அறிவித்து வருவோம் (என்றார்).

சுய ஒளி இருந்தும் தானே காணும் இயல்பற்ற கண்ணுக்குச் சூரியனது பிரகாசம் துணை செய்கின்றது. அது உலகப் பொருள்களை விளக்கி இவை இத்தகையவெனவும், பிரகாசமாகிய தன்னை வேறறக் கலந்துள்ள சூரியனை விளக்கி அச்சூரியன் இத்தகையதெனவும் கண்ணுக்குக் காட்டும். அங்ஙனமே இறைவன் தன்னின் வேறற நின்ற திருவருளால், தன்னறிவுகொண்டு தானே எதையும் அறியமாட்டாத ஆன்மாவுக்கு மும்மலவியல்புகளையும் தன்னியல்புகளையும் விளக்கியருளுவனென்க. இதனைக் "கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி உண்டில்லையல்லா தொளி" என்னுந் திருவருட்பயனாலும் உணர்க.

பொழிப்பு: மாணவகன் "தேவரீர் என் வடிவாகிய ஆன்மவியல்பினை உரைத்தருளினீர்கள்; இனி நுஞ் சொரூபமாகிய பதியியல்பினை அருளிச் செய்வீர்களாக" என்றானாக, ஞானசாரியர்: 'சூரியன் கண்ணுக்கு உதவுமாப் போலப் பதி ஆன்மாவுக்கு அறிவிக்கும் இயல்பினது" என்றார்.

## இறைவன் அறிவுக்கறிவாய் நிற்றல்.

28. அன்றியுங்கே ளான்மாவா லாய்ந்தறியு மைம்பொறிக
ளின்றி யறியா விவையென்ன — நின்றதுபோல்
ஓவாம லுன்னை யுணர்த்துவோ முன்னறிவில்
மேவாமல் மேவினா மே.



கொ—கூ: (அஃது) அன்றியும் (வேறும் உள) கேள்; ஆன்மாவால் ஆய்ந்து அறியும் ஐம்பொறிகள் (ஆன்மா) இன்றி அறியா; இவை என்ன நின்றதுபோல், நாமே உன் அறிவில் மேவாமல் மேவி, உன்னை ஓவாமல் (உனக்கு) உணர்த்துவோம்.

ப—ரை: அன்றியும் கேள் - முன்கூறிய அஃதேயல்லாமல் வேறும் உள; அவைகளைச் சொல்லுகிறோம் கேட்பாயாக; ஆன்மாவால் ஆய்ந்து அறியும் ஐம்பொறிகள் இன்றி அறியா - ஆன்மாவின் துணையினால் விடயங்களை அறிந்து காரியப்பட்டு வருகின்ற பஞ்சேந்திரியங்கள் "ஆன்மாவின் துணையினாலேயே (நாம்) அங்ஙனம் காரியப்பட்டு வருகின்றோம்" என உணரமாட்டா; இவை என்ன நின்றதுபோல் - இங்ஙனம் நின்ற இப் பஞ்சேந்திரியங்கள் (ஆன்மாவை அறியாமல் காரியப்பட்டமை) போல, நாமே உன் அறிவில் மேவாமல் மேவி- (உனது இயக்கத்துக்கு உறுதுணையாய் நின்ற எம்மை நீ உணராதிருக்கும் நிலையில்) நாம் உனது அறிவிலே (அறிவுக்கறிவாய்) பொருந்தாமல் பொருந்தி, உன்னை ஓவாமல்- உன்னை விட்டு நீங்காமல் நின்று, உணர்த்துவோம்- உனக்கு அறிவித்து வருவோம் (அதனை நீ அறிவாய்)

ஐம்பொறிகள் சடமானவை. அங்ஙனமாகவும், "கண்கண்டது; காதுகேட்டது" என்பதெல்லாம் உபசாரமாத்திரையே. காண்டல் கேட்டல் முதலியவற்றை இப்பொறிகள் மூலம் ஆன்மாவே உணர்கின்றது; பொறிகள் உணர்வதில்லை. மேலும் ஆன்மாவின் துணையால் வாழ்ந்து காரியப்படும் பொறிகள் ஆன்மாவையும் உணர்வதில்லை. இவை தமக்குத் துணையான ஆன்மாவை உணராமைபோல ஆன்மாவும் தனது உணர்வுக்கு இறைவன் இன்றியமையாதவன் என்பதை உணர்வதில்லை, இக்கருத்தேபற்றி "ஊன் உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனொடுயிர் - தானுணர்வோடொன்றாந் தரம்" எனத் திருவருட்பயன் வலியுறுத்துவதுங் காண்க.

பொழிப்பு: தமது காரியப்பாட்டுக்கு உறுதுணையாய் நின்ற ஆன்மாவை அறியாத ஐம்பொறிகள்போல, நீ (ஆன்மா) உனது காரியப்பாட்டுக்கு உறுதுணையாய் எம்மை (இறைவனை) அறியாது நிற்க, நாம் உனது அறிவில் பொருந்தி விட்டுநீங்குதலின்றி அறிவித்து வருவோம்.

### இறைவன் உயிர்க்குயிராய் நிற்றல்

29. அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றாற்போல்
மிக்க வுயிர்க்குயிராய் மேவினோம் — எக்கண்ணும்
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமமோதும் நாடு.

கொ—கூ: அகர உயிர் அக்கரங்கட்கு எல்லாம் (அக்கரமாய்) நின்றாற்போல்; (நாம்) மிக்க உயிர்க்கு உயிராய் மேவினோம்; (சடசித்துக்கள்) எக்கண்ணும் (இறைவன்) நில்லா இடத்து உயிர்க்கு அறிவு நில்லாது என்று நல் ஆகமம் ஓதும்; நாடு.

ப—ரை: அகர உயிர் அக்கரங்கட்கு எல்லாம் (அக்கரமாய்) நின்றாற்போல் - 'அ' என்னும் உயிர் எழுத்தானது ஏனைய உயிர் எழுத்துக்களுக்கெல்லாம் உயிராய் நின்று இயக்குமாறுபோல, மிக்க உயிர்க்கு உயிராய் மேவினோம் - நாம் எண்ணிறந்த ஆன்மாக்களிடத்தும் அவைகளை இயக்கும் உயிராகப் பொருந்தி நின்றோம்; எக் கண்ணும் நில்லா இடத்து உயிர்க்கு அறிவு நில்லாது என்று - சடசித்துக்கள் எல்லாவற்றிலும் இறைவன் பொருந்திநின்று அறிவியாதவிடத்து உயிர் ஒன்றையும் அறியமாட்டாது என, நல் ஆகமம் ஓதும் - நல்ல சிவாகமங்கள் அறுதியிட்டுரைக்கும்; நாடு — நீ இந்த உண்மையை விசாரித்து அறிவாயாக.

அங்காத்தலின்றி எவ்வெழுத்துக்களுக்கும் இயக்கமில்லை. அங்காத்தலே அகரத்தின் பிறப்பு. எனவே, ஏனைய 'ஆ' முதல் 'ஔ' இறுதியாய உயிர்கள் அகரமின்றி



இயங்காதாக, அகரம் உயிர்க்குயிராயது. அங்ஙனமே இறைவனும் ஆன்ம இயக்கத்துக்குக் காரணனாய் உயிர்க்குயிராயினன். "அகரவுயிரின்றேல் அக்கரங்களின்றாம்" "அகரவுயிர்போல் அறிவாகியெங்கும் நிகரிலிறை நிற்கும் நிறைந்து" "அகர முதல வெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு" முதலிய ஆன்றோர் வாக்குக்கள் ஈண்டு உய்த்துணரத்தக்கன.

பொழிப்பு: 'அ' என்னும் உயிர் ஏனைய உயிர்களுக்கு உயிராயினாற்போல, நாம் உயிர்க்கு உயிராய்ப் பொருந்தினோம்; (இக்கருத்தே பற்றி) "சடசித்துக்கள் யாவற்றிலும் (நாமே-) இறைவனே நிறைந்து நின்று அறிவித்தாலன்றி ஆன்மா ஒன்றையும் அறியமாட்டாது" எனச் சிவாகமங்கள் கூறும் உண்மையை விசாரித்து அறிவாயாக.

### மாணவகனது வேண்டுகோள்

30. நற்றவத்தோர் தாங்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்றாடல் உள்ளபடி — பெற்றிடநான்
விண்ணார் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணா ரருளாலே சாற்று.

கொ—கூ: விண் ஆர் பொழில் வெண்ணெய் மெய்கண்ட நாதனே, நல் தவத்தோர் தாம் காண நாத அந்தத்து அஞ்சு எழுத்தால் உருவாய் உற்று நின்று ஆடல் நான் உள்ளபடி பெற்றிட, (நீ உனது) தண் ஆர் அருளாலே சாற்று.

ப—ரை: விண் ஆர் பொழில் வெண்ணெய் மெய்கண்ட நாதனே - ஆகாயத்தை அளாவும்படி வளர்ந்த சோலைகளால் சூழப்பெற்ற திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருக்கின்ற மெய்கண்ட தேவரே, நல் தவத்தோர் தாம் காண — முன்னைத் தவ விசேடமுடைய நல்லான்மாக்கள் தரிசிக்கும்படி, நாத அந்தத்து அஞ்சு எழுத்தால் உருவாய் உற்று நின்று ஆடல் - நாதத்தின்

முடிவிலே இறைவன் திருவைந்தெழுத்தே திருமேனியாகக் கொண்டு நின்று திருநடனம் செய்யும் முறைமையை, நான் உள்ளபடி பெற்றிட - அடியேன் உண்மையாகத் தரிசிக்கும்படி, தண் ஆர் அருளாலே சாற்று- நீ உனது குளிர்ந்த கிருபையினாலே சொல்லியருள்வாயாக.

பொழிப்பு: மெய்கண்ட நாதனே, (முன்னைத் தவ விசேட முடையோர் காணும்படி) நாதாந்தத்தில் இறைவன் திருவைந்தெழுத்தே திருமேனியாகக்கொண்டு திருநடனம் செய்யும் முறைமையை அடியேன் தரிசிக்கும்படி கூறியருளுவீராக.

### நடனத் திருமேனியும் நடன நோக்கமும்

**31.** எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்.

கொ—கூ: புதல்வா, (சிட்டன்) நட்டம் நவிலக்கேள், சிட்டன் சிவாயநம என்னும் திரு எழுத்து அஞ்சால், (+ஏ) எட்டும் இரண்டும் உரு ஆன இலிங்கத்து (+ ஏ) அவாயம் அற நின்று ஆடுவான்.

ப—ரை: புதல்வா-மாணவகனே, நட்டம் நவிலக் கேள்- சிவபெருமானது திருநடனத்தைச் சொல்லுகிறோம் கேட்பாயாக; சிட்டன் -(அச்) சிவபெருமான், சிவாய நம என்னும் திரு எழுத்து அஞ்சாலே - சிகாரம் ஆதியாகவுடைய ஸ்ரீ பஞ்சாக்கரத்தையே திருமேனியாகக் கொண்டு, எட்டும் இரண்டும் உரு ஆன இலிங்கத்தே அவாயம் அற நின்று ஆடுவான் - அகரம் உகரம் இரண்டும் சேர்ந்த உருவமாயிருக்கின்ற யகரமாகிய ஆன்மாவிடத்திலே (அவ்வான்மாவினது) பிறவித் துன்பம் நீங்கும்படி நின்று நிருத்தம் செய்தருளுவான்.

'ஏ' இரண்டும் அசைகள்.



எட்டு - 'அ' என்னும் எழுத்தையும், இரண்டு - 'உ' என்னும் எழுத்தையும் உணர்த்தி நின்ற குறிப்பு மொழிகளாம். எட்டு ஆகிய 'அ'வும் இரண்டு ஆகிய 'உ'வும் சேரப் பத்து ஆகிய 'ய' உளதாம். இந்த 'ய' என்னும் குறி 'ய்' என்னும் எழுத்தைக் குறிப்பதாய் ஆன்மாவை உணர்த்திற்று. எனவே, (இங்ஙனம்) உய்த்துணர வைக்கும் உத்திபற்றி ஆன்மாவை "எட்டும் இரண்டும் உருவான லிங்கம்" என ஆசிரியர் குறிப்பிட்டார் என்ப.

பொழிப்பு: சிவபெருமான் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைத் திருமேனியாகக்கொண்டு யகரமாகிய ஆன்மாவிடத்திலே (அவ்வான்மாவினது) பிறவியொழியும்படி திருநடனம் செய்தருளுவான்.

### இதுவுமது

#### நகராதி பஞ்சாக்கரத் திருமேனி

**32.** ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம் கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

கொ—கூ: ஐயனே, நல் அம்பலத்தான் ஆடும்படி கேள்; நாடும் திரு அடியிலே நகரம் (ஆகவும்), கூடும் உதரம் மகரம் (ஆகவும்), வளர்தோள் சிகரம் (ஆகவும்), பகரும் முகம் வா (ஆகவும்). முடி 'ய' (ஆகவும் கொண்டு அவன் நிருத்தம் செய்வான் என்பதை விசாரித்துப்) பார்.

ப—ரை: ஐயனே-மாணாக்கனே, நல் அம்பலத்தான் ஆடும்படி கேள் - நல்ல கனகசபையிலே எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் திருநடனம் செய்கின்ற முறைமையைச் சொல்லுகிறோம் கேட்பாயாக; நாடும் திரு அடியிலே நகரம் - நாடா நின்ற திருவடியிலே நகாரமாகவும், கூடும் உதரம் மகரம் - பொருந்திய திருவுந்தியிலே மகாரமாகவும், வளர் தோள் சிகரம் - வளரா நின்ற திருத்

தோளிலே சிகாரமாகவும், பகரும் வா – சொல்லப்பட்ட திருமுகத்திலே வகாரமாகவும், முடி 'ய' – திருமுடியிலே யகாரமாகவும் (கொண்டு அவன் திருநடனம் செய்தருளுவான் என்பதைப்) பார் – (நீ) விசாரித்து அறிந்துகொள்வாயாக.

இதனால் லயாங்கமெனக் கூறப்படும் நகாராதி பஞ்சாக்கர அமைப்பும் திருநடனமும் உரைக்கப்பட்டன.

பொழிப்பு: கனகசபையில் எழுந்தருளிய இறைவன், திருவடியிலே நகாரமும், திருவுந்தியிலே மகாரமும், திருத்தோளிலே சிகாரமும், திருமுகத்திலே வகாரமும், திருமுடியிலே யகாரமும் பொருந்த (நின்ற திருமேனிகொண்டு) திருநடனம் செய்தருளுவான்.

இதுவுமது

சிகாராதி பஞ்சாக்கரத் திருமேனி

33. சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் — பார்க்கிலிறைக்(கு)
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்.

கொ—கூ: பார்க்கில், இறைக்கு, ஆர்க்கும் துடி சேர்க்கும் (கரம்) சிகரம் (ஆகவும்), சிக்கன வீசுகரம் வா (ஆகவும்), அபயகரம் (ஆகவும்). அங்கி நகரம் (ஆகவும்), முயலகனார் தங்கும் அடிக்கிழ் மகரம் (அது) (ஆகவும்) பொருந்த அவ்விறைவன் திருநடனம் செய்தருளுவன் என அறிவாயாக.)

ப—ரை: பார்க்கில் - ஆராய்ந்து பார்க்குமிடத்து, இறைக்கு - சிவபெருமானுக்கு, ஆர்க்கும் துடிசேர்க்கும் (கரம்) சிகரம் - ஒலிக்கின்ற டமருகம் ஏந்திய திருக்கரத்திலேசிகாரமாகவும், சிக்கன வீசு கரம் வா - நன்றாக வீசிய திருக்கரத்திலே வகாரமாகவும், அபயகரம் யகரம் - அஞ்சல் என அமைத்த திருக்கரத்திலே யகாரமாகவும், அங்கி நகரம் – அக்கினி ஏந்திய திருக்கரத்திலே நகாரமாகவும், முயலகனார் தங்கும் அடிக்கீழ் மகரம் அது (தான்) - முயல



கனார் பொருந்தியிருக்கும் (மிதித்த) திருவடியிலே மகாரமாகவும் பொருந்த அவ்விறைவன் திருநடனம் செய்தருளுவன் என அறிவாயாக.

இதனால் போகாங்கமென்னும் சிகாராதி பஞ்சாக்கர அமைப்புந் திருநடனமும் உரைக்கப்பட்டன. 'அது' பகுதிப் பொருள் விகுதி; 'தான்'—அசை.

பொழிப்பு: இறைவன் டமருகமேந்திய திருக்கையில் சிகாரமும், வீசிய திருக்கையில் வகாரமும், அபயகரத்தில் யகாரமும், அக்கினியேந்திய திருக்கையில் நகாரமும் ஊன்றிய திருவடியில் மகரமும் பொருந்த (ப் பஞ்சகிருத்திய) த் திருநடனம் செய்தருளுவான்.

இதுவுமது

திருவாசி – ஓங்காரமும், பஞ்சாக்கர நடன தரிசனத்துக்கு அதிகாரிகளும், பயனும்

34. ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்
நீங்கா வெழுத்தே நிறைசுடராம் — ஆங்காரம்
அற்றா ரறிவரணி யம்பலத்தா னடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்.

கொ—கூ: ஓங்காரமே நல் திருவாசி; அதனில் உற்று நீங்கா எழுத்தே நிறைசுடராம்; (இவற்றை) ஆங்காரம் அற்றார் அறிவர்; அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பின் பிறப்பு அற்றார்.

ப—ரை: ஓங்காரமே நல் திருவாசி - ஓம் என்னும் பிரணவ மந்திரமே நல்ல திருவாசியாகும்; அதனில் உற்று நீங்கா எழுத்தே நிறைசுடராம் – அப் பிரணவத்தைப் பொருந்தி அதனைவிட்டு நீங்காத பஞ்சாக்கரமே திருவாசியில் சுடராயமைந்து நிறைந்து நின்ற (உள்) ஒளியாகும். ஆங்காரம் அற்றார் அறிவர் - இவை இங்ஙனமாதலை யான் எனது என்னும் செருக்கறுத்த பக்குவான்மாக்கள் அறிவார்கள்; அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பின் பிறப்பு அற்றார் - அழகிய பொன்னம்

பலமுடையான் செய்கின்ற திருநடனத்தைத் தரிசிக்கப் பெற்றவர்களே பின்பு பிறப்பு இல்லாதவராவர்.

இதனால் சூக்கும பஞ்சாக்கர அமைப்பும், திருநடன தரிசனத்துக்கு அதிகாரியாவாரியல்பும், தரிசனப் பயனும் கூறப்பட்டன. ஆங்காரம் ஆணவமயக்கத்தான் உளதாகிய செருக்கு; அது தான் அல்லாத உடம்பை "யான்" என்றலும், தனதல்லாத — தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை 'எனது' என்றலுமாம். திருவாசியிலுள்ள சுடர்கள் ஐம்பத்தோரக்கரங்களென்ப. பிரணவத்துள் பஞ்சாக்கரம் உற்று நீங்காதிருக்கும் என்றமைக்கு "இறை சத்தி பாசம் எழின்மாயை ஆவி, உற நிற்கும் ஓங்காரத்துள்" (திரு அ. பய. அதி. 9. செய். 1) என்பது சான்றுதல் உணர்க.

பொழிப்பு: பிரணவமே திருவாசியாதலையும், பிரணவத்துள் அடக்கமான பஞ்சாக்கரமே திருவாசியில் நிறைந்த சுடராதலையும், ஆணவ முனைப்பகன்றார் அறிவர். (இங்ஙனம் உட்பொருள் உணர்ந்து) இறைவனின் திருநடனத்தைத் தரிசித்தவர்களே (இனிப்) பிறவியற்றாராவர்.

### இதுவுமது

* பஞ்ச கிருத்திய நடனம்

35\. *தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பிற்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தி லுற்றதிரோ தம்முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு.*

கொ—கூ: (இறைவன்) துடி அதனில் தோற்றம் (ஆகவும்), அமைப்பில் தோயும் திதி (ஆகவும்), சாற்றியிடும் அங்கியில் (+ஏ) சங்காரம் (ஆகவும்), ஊற்றம் ஆ(க) ஊன்றும் மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் (ஆகவும்), நான்ற மலர்ப்பதத்து (+ஏ) முத்தி (ஆகவும் திருநடனம் செய்வான் என்பதை நீ) நாடு.



ப—ரை: துடி அதனில் தோற்றம் – இறைவன் டமருகம் ஏந்திய திருக்கரத்திலே படைத்தலாகவும், அமைப்பில் தோயும் திதி–அபய கரத்திலே ஆன்மா பொருந்துகின்ற காத்தலாகவும், சாற்றியிடும் அங்கியில் (+ஏ) சங்காரம் - சொல்லப்பட்ட அக்கினி ஏந்திய திருக்கரத்திலே (மலம் நீக்கிச் சுகம் செய்தலாகிய) அழித்தலாகவும், ஊற்றம் ஆ(க) ஊன்றும் மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் - உறுதிபெற ஊன்றி நின்ற திருவடியிலே பிரபஞ்சத்தை மறைத்தலாகவும், நான்ற மலர்ப்பதத்து (+ஏ) முத்தி நாடு - தூக்கிய மலர்போலுந் திருவடியிலே முத்தியளித்தலாகிய அனுக்கிரகமாகவும் திருநடனம் செய்வானென்பதை நீ விசாரித்து அறிவாயாக.

'ஏ' இரண்டும் அசைகள்.

பொழிப்பு: இறைவன் டமருகமேந்திய திருக்கரத்திலே படைத்தலாகவும், அபயகரத்திலே காத்தலாகவும், அக்கினியேந்திய திருக்கரத்திலே அழித்தலாகவும், ஊன்றிய திருவடியிலே மறைத்தலாகவும் தூக்கிய திருவடியிலே முத்தி அனுக்கிரகமாகவும் பஞ்சகிருத்திய நடனம் செய்வான். இவ்வுண்மையை நீ ஆராய்ந்தறிவாயாக.

### மும்மலம் நீக்கி முத்தியளிக்குந் திருநடனம்

36\. *மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்*
*சாய அமுக்கியருள் தானெடுத்து — நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்*
*தானெந்தை யார்பரதந் தான்.*

கொ—கூ: எந்தையார் பரதம் (செய்யும் திருநடன முறைமை தான்) மாயைதனை உதறி, வல்வினையைச் சுட்டு, மலம் சாய அமுக்கி, அருள் (தான்) எடுத்து, நேயத்தால் ஆனந்த வாரியில் ஆன்மாவை (தான்) அழுத்தல் தான்.

ப—ரை: எந்தையார் பரதம் (தான்) - எமது தந்தையாகிய பரமேஸ்வரனது திருநடன முறைமையாவது, மாயைதனை உதறி–டமருகம் ஏந்திய திருக்கரத்தினாலே மாயையை நீக்கி, வல்வினையைச் சுட்டு–அக்கினி ஏந்திய திருக்கரத்தினாலே கன்மத்தை அழித்து, மலம் சாய அமுக்கி - ஊன்றிய திருவடியினாலே ஆணவ மலம் மேலிடாமல் அழுத்தி, அருள் (தான்) எடுத்து - தூக்கிய திருவடியினாலே திருவருளை உடம்பாக நிறுத்தி, நேயத்

தால் ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத்(தான்) அளுத்தல் தான்-பெருங்கருணை கொண்டு அஞ்சலென அமைத்த திருக்கரத்தினாலே பேரானந்த சாகரத்தில் ஆன்மாவை மூழ்குவித்தலேயாம்.

முதல் மூன்று 'தான்'களும் அசை

பொழிப்பு: பரமேசுவரனது திருநடன முறைமை யாவது:- மாயையை நீக்கி, கன்மத்தை அழித்து, ஆணவ மலம் மேலிடாமல் அழுத்தி, திருவருளை உடம்பாக நிறுத்தி, தமது பெருங் கருணையினாலே ஆன்மாவைப் பேரானந்தத்தில் மூழ்குவித்தலேயாம்.

**✝ அம்பலத்தான் கூத்தின் பயன் அந்தமிலின்பமாம்**

**37.** *மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்*
*தானந்த மானிடத்தே தங்கியிடும் — ஆனந்தம்*
*மொண்டருந்தி நின்றாடல் காணுமருள் மூர்த்தியாக்*
*கொண்டதிரு வம்பலத்தான் கூத்து.*

கொ—கூ: அந்த(ம்) மோனமாமுனிவர் மும்மலத்தை மோசித்து,'தான்' அந்தம் ஆன இடத்து (+ஏ) தங்கியிடும் ஆனந்தம் மொண்டு அருந்திநின்று, ஆடல் காணும் (அது தான்) அருள் மூர்த்தியா(க)க் கொண்ட திரு அம்பலத் தான் கூத்து (முறைமையாம்).

ப—ரை: அந்தம் மோன மா முனிவர் மும்மலத்தை மோசித்து - முடிவான மௌன தவமுடைய சிறந்த ஞானிகள் அவனருளாலே மும்மலங்களையும் நீக்கி, 'தான்' அந்தம் ஆன இடத்தே தங்கியிடும் - 'நான் பிரமம்' என் னும் ஆன்ம போதம் முடிவடைந்த காலத்திலே தோன்றி நிலைத்து நிற்கின்ற, ஆனந்தம் மொண்டு அருந்தி நின்று ஆடல் காணும் (அதுதான்) - ஆனந்த வெள்ளத்தை முகந்துகொண்டு அதனை அநுபவித்திருத்தலே பயனாகத் திருநடனத்தைத் தரிசிப்பதுதான், அருள் மூர்த்தியா(க)க் கொண்ட திரு அம்பலத்தான் கூத்து - எல்லா ஆன் மாக்களும் ஈடேறவேண்டும் என இயல்பாக எழுகின்ற கருணையே திருமேனியாகக் கொண்ட திருவம்பல முடை யானது திருநடன முறைமையாகும்.

'ஏ' அசை.



இதனால் அவனருளே பற்றுக்கோடாக மும்மலம் நீங்கி ஆன்மபோதமுமகன்ற நிலையிலேயே ஆன்மா பக்கு வியாகுமென்பதும், அப்பக்குவ நிலையிலே உளதாகும் பதிஞானத்தினாலேயே ஆனந்தம் மொண்டருந்தலாகிய பயன் பெறற்பால தென்பதும் வலியுறுத்தப்பெற்றன.

பொழிப்பு: மௌன விரதமுடைய முனிவர்கள் மும்மலங்களையும் நீக்கி, ஆன்மபோதம் அதன்ற நிலையில் நிலைத்து நிற்பதாகிய பேரானந்தத்தை முகந்து அநுப வித்து இருத்தலே பயனாகத் திருநடனத்தைத் தரிசிப் பதுதான், கருணையே உருவமான திருவம்பலமுடையா னின் திருநடன முறைமையாகும்.

**பிரான் நடனம் பேணுவார்க்குப் பிறப்பில்லை.**

**38.** *பரையிடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்*
*உரையுணர்வுக் கெட்டா வொருவன்—வரைமகள் தான்*
*காணும்படியே கருணையுருக் கொண்டாடல்*
*பேணுமவர்க் குண்டோ பிறப்பு.*

கொ—கூ: உரை உணர்வுக்கு எட்டா ஒருவன், மிகு பஞ்சாக்கரத்தால் கருணை உருகொண்டு, பரை இடமா(க) நின்று, வரை மகள்'தான்' காணும்படி (+ ஏ) ஆடல் (செய்வதைப்) பேணும் அவர்க்குப் பிறப்பு உண் டோ? (இல்லை).

ப—ரை: உரை உணர்வுக்கு எட்டா ஒருவன் - வாக்கு மனாதீதனாகிய ஒப்பற்ற இறைவன், மிகு பஞ்சாக்கரத் தால் கருணை உருகொண்டு - மேன்மைமிக்க ஸ்ரீபஞ்சாக் கரத்தினாலே கருணையே திருமேனியாகக் கொண்டு, பரை இடமாக நின்று - பராசத்தியாகிய பொன்னம்பலமே இடமாகநின்று, வரைமகள் காணும்படி (+ ஏ) - மலை யரையன் மகளாகிய உமையம்மை காணும்படி, ஆடல் - திருநடனஞ்செய்தருளுவதை, பேணும் அவர்க்குப்பிறப்பு உண்டோ - விரும்பி(த்தரிசித்து) வாழுகின்றவர்களுக்குத் தொடர்ந்து வருவதாகிய பிறவித் துன்பம் இல்லையாம்.

'தான்,' 'ஏ' அசைகள்

"உரையுணர்வுக் கெட்டா வொருவன் மிகு பஞ்சாக் கரத்தால் வரை மகள் தான்பாதி பரையிடமாக் காணும் படியே" என்பதும் பாடம். ஆயின், "உரை உணர்வுக்கு எட்டா ஒருவன், மிகு பஞ்சாக்கரத்தால் வரைமகள் பாதி, தான் பாதி (ஆகக்) கருணை உருக்கொண்டு, பரை இடமாக நின்று, (அவ்)வரைமகள் காணும்படியே ஆடல் செய்வதைப் பேணும்அவர்க்குப் பிறப்புஉண்டோ?எனக் கொண்டு கூட்டிப் பொருள் உரைக்க.

பொழிப்பு: இறைவன் ஸ்ரீ பஞ்சாக்கரத்தினாலே கருணையே திருமேனியாகக்கொண்டு, பொன்னம்பலமே இடமாக நின்று உமையம்மை காணும்படி திருநடனஞ் செய்தருளுவான். அத் திருநடனத்தை விரும்பித் தரிசித்து வாழுகின்றவர்களுக்குப் பிறவித்துன்பம் இல்லை.

## மாணாக்கனின் வேண்டுகோள்

39. நாதாந்த நாடகத்தை நன்றா யருள்செய்தீர்
ஓதீ ரெழுத்தஞ்சு முள்ளபடி—தீதறவே
அஞ்செழுத்தீ தாகி லழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச வருட்குருவே சாற்று.

கொ—கூ: தஞ்ச அருட்குருவே, நாத அந்த நாடகத்தை நன்றாய் அருள் செய்தீர்; அஞ்சு எழுத்து ஈது (எழுத்து) ஆகில், அழியும் எழுத்தாய் விடுமோ?, ஓதீர்; தீது அற (+ஏ) எழுத்து அஞ்சும் உள்ளபடி சாற்று.

ப—ரை: தஞ்ச அருட்குருவே - எனக்குப் புகலிடமாயிருக்கின்ற பெருங்கருணையுடைய ஞானதேசிகரே, நாத அந்த நாடகத்தை நன்றாய் அருள் செய்தீர் - நாத முடிவாய் இருக்கின்ற திருநடன முறைமையை அடியேனுக்கு நன்றாக அருளிச் செய்தீர்கள்; அஞ்செழுத்து ஈது (எழுத்து) ஆகில் - இறைவன் திருமேனியாகக் கொண்டருளுகின்ற பஞ்சாக்கரம் எழுத்துக்களிலே ஒன்றாயிருக்குமாயின், அழியும் எழுத்தாய் விடுமோ?—அழியும் தன்மையுடைய எழுத்தாகுமோ?, ஓதிர் - செல்லுவீராக; தீது



எழுத்து அஞ்சும் உள்ளபடி சாற்று -(மேலும் அடியேனது மயக்கமாகிய குற்றம் நீங்கும்படிக்குப்)பஞ்சாக்கரத்தின் உண்மை இருந்தபடி எது வென்பதனை அருளிச் செய்வீராக.

பொழிப்பு: ஞானதேசிகரே, திருநடன முறைமையை அருளிச் செய்தீர்; ஸ்ரீ பஞ்சாக்கரம் எழுத்துக்களில் ஒன்றாயிருக்குமானால் அவ்வெழுத்துக்களே போல அழியும் எழுத்தாய்விடுமோ? மேலும் (எனது மயக்கம் அகலும் படிக்கு) திருவைந்தெழுத்துண்மை இருந்த முறைமையை அருளிச் செய்வீராக.

## பொருள் அழியாப் பஞ்சாக்கரத்தின் உட்பொருள்

40. உற்ற குறியழியு மோதுங்காற் பாடைகளிற்
சற்றும் பொருள்தான் சலியாது—மற்றதுகேள்
ஈசனரு ளாவி யெழிலார் திரோதமலம்
ஆசிலெழுத் தஞ்சினடை வாம்.

கொ—கூ: ஓதுங்கால், பாடைகளில் உற்ற(எழுத்துக்களின்) குறி அழியும்; பொருள்(தான்)சற்றும் சலியாது; (மற்று)அது கேள், ஈசன் அருள் ஆவி எழில்ஆர் திரோதம் மலம் ஐந்தும் ஆசு இல் எழுத்து அஞ்சின் அடைவு ஆம்.

ப—ரை: ஓதுங்கால் - பஞ்சாக்கரத்தின் உண்மையைச் சொல்லுமிடத்து, பாடைகளில் உற்ற குறி அழியும் -பல்வேறு மொழிகளிலும் பொருந்திய எழுத்துக்களின் குறிகள் தாம் அழியும் இயல்பினை உடையனவாம்; பொருள்(தான்) சற்றும் சலியாது - (ஆனால்) அவற்றால் அறியக்கிடந்த பொருள் சற்றேனும் அழியாது; (மற்று) அது கேள் - (ஆதலால்) அப்பஞ்சாக்கரத்தின் உண்மைப் பொருளியல்பை உரைக்கின்றோம் கேட்பாயாக, ஈசன் அருள் ஆவி எழில் ஆர் திரோதம் மலம் - சிவன், அருள் (சத்தி),ஆன்மா, அழகு(நன்மை) பொருந்திய திரோதான சத்தி, (ஆணவம் கன்மம் மாயையாகிய மும்) மலம் என்னும் ஐந்தும், ஆசு இல் அஞ்சு எழுத்தின் அடைவு ஆம்-குற்றமற்ற ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் பொருண்முறைமையாம்.

'தான்' 'மற்று' என்பன அசைகள்.

சிகாராதி பஞ்சாக்கரத்தில் 'சி' - சிவத்தையும், 'வ' - அருட்சத்தியையும், 'ய' - ஆன்மாவையும், 'ந' - திரோதான சத்தியையும், 'ம' - மும்மலங்களையும் குறிப்பன. இப்பஞ்சாக்கர அமைப்பில், 'ய' ஆகிய ஆன்மாவைப் பெத்த நிலைப்படுத்தும் 'ந' 'ம' - என்பன ஒரு புறமாக நின்று ஊன நடனத்தையும், முத்திநிலைப் படுத்துவனவாகிய 'சி' 'வ' - என்பன மற்றொரு புறமாக நின்று ஞான நடனத்தையும் விளக்கும். எழுத்தஞ்சின் அடைவு இங்ஙனமாதலைத் திருவருட்பயனாசிரியர் "ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம் - ஞானநடம் தானடுவே நாடு" என்ப.

பொழிப்பு: மொழிகளிலுள்ள எழுத்துக்களின் குறி அழியுமேயன்றிப் பொருள் அழியாது அங்ஙனம் பொருள் சற்றேனும் அழியாது நின்ற ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் உட்பொருள் சிவம் அருட்சத்தி ஆன்மா திரோதான சத்தி மலம் என்னும் ஐந்துமாம்.

### சிகாராதி நகாராதி பஞ்சாக்கரவியல்பு

**41.** சிவனருளாவி திரோதமல மைந்தும்
அவனெழுத் தஞ்சி னடைவாம்—இவனின்று
நம்முதலா வோதிலருள் நாடாது நாடுமருள்
சிம்முதலா வோதுநீ சென்று.

கொ - கூ: சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் அவன் அஞ்சு எழுத்தின் அடைவு ஆம்; (ஆயினும்) இவன் நின்று 'ந' முதலா(க) ஓதில் அருள் நாடாது; (ஆதலால்) நீ சென்று (பொருந்தி) 'சி' முதலா(க) ஓது; (அதனால்) அருள் நாடும்.

ப—ரை: சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்- சிவன் திருவருட்சத்தி ஆன்மா திரோதானசத்தி மும்மலம் என்னும் ஐந்தும், அவன் அஞ்சுஎழுத்தின் அடைவு ஆம்- அவ் இறைவனது பஞ்சாக்கரத்தின் உண்மைப் பொருண் முறைமையாம்; ஆயினும், இவன் நின்று-பக்குவமடைந்த இவ் ஆன்மா பொருந்தி நின்று, 'ந' முதலா



ஓதில் - திரோதான சத்தியாகிய நகாரம் முதலாக உச்சரித்தால், அருள் நாடாது - திருவருள்வந்து அணையாது; ஆதலால், நீ சென்று 'சி' முதலாக ஓது - நீ சிகாரம் ஆகிய சிவம் முதலாக நின்ற பஞ்சாக்கரத்தைப் பொருந்தி உச்சரிப்பாயாக; அருள் நாடும் - அங்ஙனம் உச்சரிப்பதனால் திருவருள் உன்னிடம்வந்து பொருந்தும்.

பெத்த நிலைப்படுத்துவதாகிய மலம் திரோதம் இரண்டும் பின்நிற்க, அவற்றினின்றும் நீங்கி, ஞான ஒளியாகிய அருளை முன்னிட்டு, அதன் வழிப்படுதலினாலேயே ஆன்மா இறைவனை அடைய முடியும் என்பார், 'ந' முதலாக ஓதில் அருள் நாடாது என்றும் 'சி' முதலாக ஓது (அதனால்) அருள் நாடும் என்றும் குறிப்பிட்டார். பக்குவமடைந்த ஆன்மாவாகிய உண்மை மார்க்கத்து மாணவகனுக்குச் "சிகாராதி பஞ்சாக்கரமே யோதுக" எனத் தேசிகர் பணித்தமையான், ஏனைப் பக்குவமில்லாத உபாய மார்க்கத்தார் தம் உலக இன்ப அநுபவ நிமித்தம் நகாராதி பஞ்சாக்கரம் ஓதுதற்குரியர் என்பதும் குறிப்பானுணர வைக்கப்பட்டது. சிகராதி பஞ்சாக்கரத்தைச் சூக்கும பஞ்சாக்கரம் அல்லது முத்தி பஞ்சாக்கரம் எனவும், நகாராதி பஞ்சாக்கரத்தைத் தூலபஞ்சாக்கரம் எனவும் கூறுப. இவையன்றி, காரணம், மகாகாரணம், மகாமனு என மேலும் மூவகைப் பஞ்சாக்கரமுமுள. அவற்றுள், காரண பஞ்சாக்கரமாவது யகாரமாகிய ஆன்மாவுக்கு முன்னும் பின்னும் எதிர் நிரனிறையாகச் சிகார வகாரங்கள் நிற்க அமைவதாம். இதற்கு அதிசூக்கும பஞ்சாக்கரம், முத்தி பஞ்சாக்கரம், இருதலை மாணிக்கம், இருதலைக்கொள்ளி என்பன மறுபெயர்கள். மகாகாரண பஞ்சாக்கரமாவது, யகாரமாகிய ஆன்மா வகாரமாகிய அருள்வயப்பட்டு அதனோடு சேர்ந்துவிட (ஆன்மாவென வேறொன்றின்றிச்) சிகார வகாரமாகிய இரண்டெழுத்து மாத்திரையாய் நிற்பதாம். மகாமனுவாவது, மகாகாரண பஞ்சாக்கரமாய் நின்ற சிகார வகாரங்களிரண்டினுள் வகாரம், சிகாரமாகிய சிவத்தி

னுள் அடங்கிச் சிகாரமாகிய ஒரெழுத்து மாத்திரையாய் நிற்பதாம். இதனை நாயோட்டுமந்திரம் எனவும், இறையெழுத்து எனவும், பெருவெழுத்தெனவும் கூறுப. இங்கே கூறப்பட்ட ஐவகைப் பஞ்சாக்கரமும் ஆன்மாவின் பக்குவ தாரதம்மியத்தின்படி சாதனை செய்வதற்குரியன.

பொழிப்பு: சிவன் முதலான ஐந்தும் திருவைந்தெழுத்தின் பொருள் முறைமையாம். பக்குவமுடைய ஆன்மா நமசிவய என ஓதினுல் அருள்பொருந்தாது; ஆதலால் (உண்மை மார்க்கத்துக் குரிய) நீ சிவயநம என உச்சரிப்பாயாக.

(சிகாராதி பஞ்சாக்கர) ஓதற்பயன்

42. அண்ணல் முதலா வழகா ரெழுத்தைந்தும்
எண்ணி லிராப்பகலற் றின்பத்தே — நண்ணி
அருளானது சிவத்தே யாக்கு மணுவை
இருளா னதுதீர வின்று.

கொ—கூ: அண்ணல் முதல் ஆ(க) அழகு ஆர் ஐந்து எழுத்தும் எண்ணில், இன்று, இருள் ஆனது தீர, அருள் ஆனது அணுவை நண்ணி, இரா பகல் அற்ற இன்பத்து (+ஏ) சிவத்து (+ஏ) ஆக்கும்.

ப—ரை: அண்ணல் முதலா - சிவனைக் குறிக்கும் சிகாரம் முதலாகவுள்ள, அழகு ஆர் ஐந்து எழுத்தும்- உண்மை அழகு பொருந்திய திருவைந்தெழுத்தையும், எண்ணில் - இடையீடின்றித் தியானித்தல் செய்யின், இன்று - (தியானிக்கும்) இப்பொழுதே, இருள் ஆனது தீர - ஆணவ மல மயக்கமானது முற்ருக அகலும்படிக்கு, அருள் ஆனது அணுவை நண்ணி - திருவருளானது ஆன்மாவைத் தானே பொருந்தி, இரா பகல் அற்ற இன்பத்து(+ஏ) சிவத்து(+ஏ) ஆக்கும் - கேவலம் சகலம் என்னும் பெத்த நிலைகளினின்றும் நீங்கிய (சுத்தநிலையிற் பெறுதற்குரிய) பேரின்பத்தையுடைய சிவத்தினிடம் சேர்க்கும்.



''சிவமுதலே யாமாறு சேருமேல் தீரும்
பவம்; இதுநீ யோதும் படி''

(அதி. 9. செய். 7)

எனத் திருவருட்பயனுரைப்பதுங் காண்க. அணு என்றது ஆணவ மயக்கமுடைய ஆன்மாவை. அணு சிறிய தன்மையுடையது; ஆணவத்தால் ஆன்மா சிறிய தன்மையதாக்கப்படுதலின் அவ்வியல்படைந்த ஆன்மாவை அணு என்ருர். 'அற்ற இன்பம்' எனற்பாலது 'அற்றின்பம்' என நின்றது.

'ஏ' இரண்டும் அசைகள்.

பொழிப்பு: சிகாரம் முதலாகவுள்ள திருவைந்தெழுத்தையும் இடையீடின்றித் தியானித்தால், ஆணவ மயக்கம் முற்ருக அகலும்படிக்குத் திருவருளானது பொருந்திக், கேவல சகல நிலைகளில் நீங்கிய சுத்த நிலையில் பெறுதற்குரிய பேரின்பத்தையுடைய சிவத்தினிடம் சேர்க்கும்,

இதுவுமது

43. ஆதி மலமிரண்டு மாதியா யோதிறை
சேதியா மும்மலமுந் தீர்வாக — போதம்
மதிப்பரிதா மின்பத்தே வாழலாம் மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே.

கொ—கூ: ஆதி மலம் இரண்டும் ஆதியாய் ஓதினுல், சேதியா(த) மும்மலமும் தீர்வு ஆகா; (ஆதலால்) அஞ்சு எழுத்தும் (+ஏ) (இம்முறைமை) மாறி விதிப்படி ஓது; (அங்ஙனம் ஓதுவதனுல், ஆன்ம) போதம் மதிப்பு அரிது ஆம் இன்பத்து (+ஏ) வாழலாம்.

ப—ரை:- ஆதி மலம் இரண்டும் - திரோதான சத்தியாகிய நகாரம் மலம் ஆகிய மகாரம் என்னும் இரண்டு எழுத்துக்களும், ஆதியாய் ஓதினுல் - முதலாகப் பொருந்தும்படி உச்சரித்தால், சேதியா மும்மலமும் தீர்வு ஆகா - இன்றுவரை நீக்கப்படாத மூன்று மலங்களும் அகன்று பேரின்பப் பெருவாழ்வு கைகூடாது ஆத

லால், அஞ்சு எழுத்தும் மாறி விதிப்படி ஓது-திருவைந் தெழுத்தையும் நகார மகாரங்கள் முதலாக ஓதும் முறைமை மாறி(ச் சிகார வகாரங்களை முன்னாக வைத்து) விதிப்படி உச்சரிப்பாயாக; போதம் மதிப்பு அரிது ஆம் இன்பத்து வாழலாம் — அங்ஙனம் ஓதுவதனால் ஆன்ம போதங்கொண்டு அளவிட்டறிதற் கியலாத பேரின்பத்தை எய்தி வாழலாம்.

'ஏ' இரண்டும் அசைகள்.

"விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரப் பெறும்." எனவும்,
"மாலார் திரோதம் மலமுதலா மாறுமோ
மேலாசு மீளா விடின்" எனவும்,
"ஆராதி யாதார மங்தோ வதுமீண்டு
பாராது நீயோர்தும் பற்று" எனவும் வரும் திருவருட் பயன் (அதி. 9. 4-ம், 5-ம், 6-ம்) செய்யுள்களானும் இத னுண்மை தெளிக.

பொழிப்பு: நகாரம் மகாரமாகிய இரண்டும் முதலாக வைத்துத் திருவைந்தெழுத்தை ஓதினால் மும்மலங்கள் நீங்கா; (பேரின்ப வாழ்வு கைகூடாது;) ஆதலால் இவ்வாறு ஓதும் முறைமை மாறிச் சிகார வகாரங்களை முன்னாக வைத்து, (விதிமுறை தவறாமல்) உச்சரிப்பாயாக; அதனால், ஆன்மபோதங் கொண்டறிய முடியாத பேரின்பத்தை அடைந்து வாழலாம்.

### வேதம் ஆகமம் புராணம் தாண்டவம் முத்தியாவும் ஐந்தெழுத்துள் அடக்கம்

44. அஞ்செழுத்தே யாகமமு மண்ண லருமறையும்
அஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்தும் — அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமு மாறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்.

கொ—கூ: அண்ணல் (அருளிய) அருமறையும் ஆகமமும் அஞ்சு எழுத்தே; (அண்ணலின் அருள்வழிப்பட்ட சான்றோர் அருளிய) ஆதி புராணம் அனைத்தும் அஞ்சு



எழுத்தே; (அண்ணலின்) ஆனந்தத் தாண்டவமும் அஞ்சு எழுத்தே; ஆறு ஆறுக்கு அப்பாலாம் மோன அந்த மா முத்தியும் அஞ்சு எழுத்தே.

ப—ரை: அண்ணல் அருமறையும் ஆகமமும் அஞ்சு எழுத்தே - இறைவன் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அருளிச் செய்த வேதங்கள் நான்கும் ஆகமங்கள் இருபத்தெட்டும் திருவைந்தெழுத்தின் உட்பொருள் விளக்கமேயாம்; ஆதி புராணம் அனைத்தும் அஞ்சு எழுத்தே- (அவனருள் வழிப்பட்டு நின்ற சான்றோரால் அருளிச் செய்யப்பட்ட) முதன்மையான புராணங்கள் பதினெட்டும் திருவைந்தெழுத்தின் உட்பொருள் விளக்கமே, ஆனந்தத் தாண்டவமும் அஞ்சு எழுத்தே — பேரானந்தத்தைக் குறிக்கும் இறைவனின் திருநடனமும், திருவைந்தெழுத்தின் பயனே; ஆறு ஆறுக்கு அப்பால் ஆம் மோன அந்த மாமுத்தியும் - முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நின்ற மௌன நிலையில் விளைவதாகிய பரமுத்தியும்; அஞ்சு எழுத்தே - திருவைந்தெழுத்தின் பிரயோசனமேயாம்.

'ஆறாறுக்கப்பாலாம்' என்ற பாடத்துக்குப் பதிலாக 'யாவைக்கு மப்பாலாம்' எனக் கொள்வாருமுளர். 'யாவைக்கும்' என்பதற்கு 'எல்லாத் தத்துவங்களுக்கும்' என்றே அவர்கள் பொருளுரைத் தமைந்தார்களாதலானும், அங்ஙனமவர்களுரைத்த எல்லாத் தத்துவங்களும் 'ஆறாறு' (-முப்பத்தாறு எனக் குறிப்பிட்டவற்று)க்குள் அடங்குமாதலானும் 2-ம் செய்யுளில் 'ஆறாறு தத்துவமேது?' என மாணாக்கன் வினவியதாக எடுத்துக்கொண்ட சொல்லாட்சியையே (மயங்க வையாமைப் பொருட்டுப்) பிறண்டும் வைத்து வலியுறுத்துவது முறைமையாதலானும், (அச்சொல்லாட்சியானே மோனைத் தொடையியைந்து அழகு செய்தலானும்)ஈண்டு 'ஆறாறுக்கப்பாலாம்' என்னும் பாடமே பொருத்தமுடைத்தாதல் உணர்க.

இறைவன் அநாதியானவன். ஆன்மாக்களும் அநாதியானவை. அநாதியான ஆன்மாக்களின் நன்மைகருதி அநாதியான இறைவனருளிய அருமறை ஆகமங்களும் அநாதியானவையே. ஆனுல், அவை தவிர்ந்த புராணங்களோ அவ்விறைவனின் அருள்வழிப்பட்ட சான்ருேரால் 'இடையில்' அருளப்பட்டவை –'ஆதி' ஆனவை. (ஆதி - தொடக்கம்) ஆதலின், "ஆதிபுராணம்" என்ருர் எனக் கொண்டு அத்தொடருக்கு "இடைக்காலத்து அருளப்பட்ட பதினெண் புராணங்கள்" எனப் பொருளுரைப் பினுமமையும்.

இச்செய்யுள் கூறும் உண்மையை 'அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்–பொருணூல் தெரியப் புகும்" (அதி. 9. செய். 1) என்னுந் திருவருட்பயனுலுமுணர்க. (வேதம் ஆகமம் புராணம் என்பவற்றைப் பற்றிய விரிவான விளக்கங்களைத் 'திருவருட்பயன் வினவிடை'யிற் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.)

பொழிப்பு: இறைவன் அருளிய வேதம் ஆகமம் என்பனவும் அவனருள் வழிப்பட்ட மெய்யடியார்கள் அருளிய புராணங்களும் திருவைந்தெழுத்தின் உட்பொருள் விளக்கமாம்; அவ்விறைவனது திருநடனமும் தத்துவாதீதமான பரமுத்தியும் அத் திருவைந்தெழுத்தின் பயனேயாம்.

### அத்துவித முத்திக்கு உதாரணம்

45 முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை யிவையிற்றி—ஞெத்த
விரதமணம் வெம்மை யெழினுதம் போல
விரவுவரென் ருேதும் விதி.

கொ—கூ: முந்துபழம் போது அங்கி வித்தகம் ஆம் வீணை (ஆகிய) இவையிற்றின் ஒத்த இரதம் மணம் வெம்மை எழில் நாதம்போல, முத்திதனை அடைந்தோர் (சிவத்தில் அத்துவிதமாய்) விரவுவர்; என்று 'விதி' ஓதும்.



ப—ரை: முந்து பழம் - முற்றிக் 'கனிந்த' பழமும், போது-மலரும், அங்கி - அக்கினியும், வித்தகம் ஆம் வீணை-அற்புதமான வீணையும் ஆகிய, இவையிற்றின் ஒத்த - இப் பொருள்களிடம் முறையே பொருந்தி இருக்கின்ற இரதம் - சுவையும், மணம் – வாசமும், வெம்மை-சூடும், எழில் நாதம் போல - இனிய ஓசையும் போல, முத்தி தனை அடைந்தோர் விரவுவர் - பரமுத்தியைப் பெற்றவர்கள் சிவனிடத்து அத்துவிதமாய்க் கலந்திருப்பர்; என்று விதி ஓதும் - என இவ்வாறு சிவாகமங்கள் அறுதியிட்டுரைக்கும்.

பழம் குணி; அதன் சுவை குணம். பழமும் சுவையும் குணிகுண சம்பந்தமுடையவை. சிவமும் ஆன்மாவும் பழமும் சுவையும் போலக் குணிகுண சம்பந்தமுடையனவாயின், சிவம் குணியாகவும் ஆன்மா அதன் குணமாகவும் இருத்தல் வேண்டும். ஆனுல், சத்தாகிய சிவம் வேறு; சதசத்தாகிய ஆன்மா வேறு; அவை இரண்டும் வெவ்வேறு குணிகளாம். அங்ஙனமாயின் இருவேறு குணிகளின் சம்பந்தத்துக்கு, ஒரு குணிக்கும் அதன் குணத்துக்கும் உள்ள தொடர்பைத் திருட்டாந்தமாகக் காட்டியமை பொருத்தமுடையதாகுமா? எனின், அது 'கலந்திருக்குந் தன்மை' ஒன்றினுக்கே (ஒரு புடையொப்பாகக்) காட்டப்பட்டது எனக் கொள்க. இனி, வருஞ் செய்யுளால் அத்துவித முத்திக்கு இருவேறு குணிகளின் சம்பந்தம் திருட்டாந்தமாக உரைக்கப்படுவதுங் காண்க.

பொழிப்பு: பழமும் சுவையும், மலரும் மணமும், அக்கினியும் சூடும், வீணையும் நாதமும் போலப் பரமுத்தியடைந்த ஆன்மாக்கள் சிவனிடத்து அத்துவிதமாகக் கலந் திருப்பர் என்று சிவாகமங்கள் உரைக்கும்.

### இதுவுமது

46. தத்துவங்க ளெல்லாஞ் சகசமா யான்மாவிற்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல்—முத்திதனிற்
சித்தமல மற்ருர் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா வோதியிடுந் தான்.

கொ—கூ: (ஆன்மா) பெத்தத்தில் (இருக்கும்போது) தத்துவங்கள் எல்லாம் (அவ்) ஆன்மாவில் சகசம் ஆய் நிற்கின்ற பெற்றிபோல், சித்தமலம் அற்றார் முத்திதனில் (அத்துவிதமாய்ச்)செறிந்திடுவர்; என்று மறை சத்தியமா(க) ஓதியிடும் (தான்).

ப—ரை: பெத்தத்தில் - ஆன்மா மலங்களினால் பந்திக்கப் பட்டிருக்கும் காலத்தில், தத்துவங்கள் எல்லாம் - முப்பத்தாறு தத்துவங்களும், ஆன்மாவில் சகசம் ஆய் நிற்கின்ற பெற்றிபோல் - அந்த ஆன்மாவிடத்திலே தாம் வேறு ஆன்மா வேறு என்ற முறைமையின்றி இரண்டறக் கலந்து (தாமே ஆன்மா எனும்படி) நிற்கின்ற தன்மை போல, சித்தமலம் அற்றார் - (சகசமலம் எனப்படும்) ஆணவச் சார்பு அகன்றவர்கள், முத்திதனில் செறிந்திடுவர் - பரமுத்தி (நிலை)யில் தாம் வேறு சிவம் வேறு எனாதபடி இரண்டறக்கலந்து நிற்பர்; என்று மறை சத்தியமா(க) ஓதியிடும் - என (இவ்வாறு) வேதாந்த சிவாகமங்கள் உண்மையாக உரைக்கும்.

தான் - அசை, வேதத்தின் ஞானகாண்டமாயிருக்கும் வேதாந்தத்தையும், அதனை வகுத்துரைக்கும் சிவாகமங்களையும் பொருட்டொடர்புபற்றி ஈண்டுமறை என்றார்.

தத்துவங்கள் கருவி கரணங்களாகிய குணிகள். இவை வேறு; ஆன்மாவாகிய குணியும் வேறு. இந்த இருவேறு குணிகளும் பெத்த நிலையில் இரண்டறக்கலந்து நிற்கும் தன்மை அத்துவித முத்திக்குத் திருட்டாந்தமாக ஈண்டு உணர்த்தப்பட்டது. இது சகலநிலை உவமை எனவும் படும். இஃதன்றி, அப்பெத்த நிலையில் ஆன்மா ஆணவ சம்பந்தமுற்று நிற்பதைத் திருட்டாந்தமாக்கி, "ஒன்றி நின்று உணரும் உண்மைக்கு உவமை ஆணவத்தொடொன்றே" எனச் சிவப்பிரகாசம் உரைப்பதுங்காண்க. இது கேவல நிலையுவமை யெனப்படும்.

பொழிப்பு: பெத்த நிலையில் (கருவி கரணங்களாகிய) தத்துவங்கள் ஆன்மாவோடு அத்துவிதமாய்க் கலந்து தாமே உளவெனும்படி நிற்றல்போல, ஆணவத் தொடர்



பற்றவர்கள் பரமுத்தி நிலையில் அத்துவிதமாய்ச் சலந்து சிவமேயுளதெனும்படி நிற்பர் என்று வேதாந்த சிவாகமங்கள் உரைக்கும்.

இதுவுமது

47. ஆதவன்றன் சந்நிதியி லம்புலியி னார்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோல்—நாதாந்தத்
தண்ண லிருவடியி லான்மா வணைந்தின்பக்
கண்ணி லழுந்தியிடுங் காண்.

கொ—கூ: அம்புலியின் ஆர்சோதி ஆதவன் தன் சந்நிதியில் பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல், ஆன்மா (வானது) நாத அந்தத்து அண்ணல் திரு அடியில் அணைந்து, இன்பக் கண்ணில் அழுந்தியிடும்; (நீ) காண்.

ப—ரை: அம்புலியின் ஆர் சோதி - சந்திரனிடத்தில் நிறைந்து பிரகாசிக்கும் ஒளியானது, ஆதவன் தன் சந்நிதியில் பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல் - சூரியனது ஒளியின் முன்னிலையில் வேறுபாடின்றி இரண்டறக் கலந்தொன்றி நிற்குந் தன்மைபோல, ஆன்மா - ஆன்மாவானது, நாத அந்தத்து - நாததத்துவ முடிவில் அறியக் கூடியதாய் இருக்கிற, அண்ணல் திரு அடியில் அணைந்து - முதல்வனாகிய சிவனது திருவடி (யாகிய திருவருள் முன்னிலை)யிலே பொருந்தி, இன்பக் கண்ணில் அழுந்தியிடும் - பேரின்ப(மாகிய சிறப்பு மிக்க அநுபவ)த்தில் இரண்டறக் கலந்திருக்கும் (என்பதை), காண் - நீ அறிவாயாக.

இன்பக்கண் - பேரின்பம். கண் - பெருமை, சிறப்பு. ஆதவன் அண்ணலுக்கும், ஆதவனின் (ஒளிச்) சந்நிதி அண்ணலின் (திருவருள்ஞானமாகிய) திருவடிக்கும், அம்புலி ஆன்மாவுக்கும், (அரவால் விழுங்கப்பட்ட அம்புலி ஆணவ மறைப்புண்ட ஆன்மாவுக்கும், அரா உமிழ விளங்கும்) அம்புலியின் ஆர் சோதி ஆணவத் தொடர்பற விளங்கும் ஆன்மாவின் சிவபோதத்துக்கும் உவமையாயின. அம்புலியின் ஆர்சோதி ஆதவன் சந்நிதியில் பேத

மற அடங்கிக்கிடத்தல், ஆன்மா அண்ணல் திருவடியில் அணைந்து(ஆன்மபோத மடங்கிச்) சிவபோதமுற்றிருத்தலுக்கு உவமையாயிற்று. இனி, அச் சிவபோதத்தால் ''ஆன்மா இன்பக் கண்ணில் அழுந்தியிடும்'' என்றது மேல் வருஞ் செய்யுளில் ''ஆதித்தன் அந்தன் விழிக்குற்றமற நின்றதுபோற் கொள்'' எனவந்த திருட்டாந்தத்தானுணரப்படும்.

பொழிப்பு: சந்திரப் பிரகாசம் சூரியப் பிரகாசத்தோடு அத்துவிதமாகி(ச் சூரியப்பிரகாசமே உளதெனும்படி) நிற்றல் போல, ஆன்மா இறைவன் திருவடியில் அணைந்து, பர முத்தி இன்பத்தில் அழுந்தி(ச் சிவமே உளதெனும்படி) இரண்டற நிற்கும் என நீ அறிவாயாக.

### அத்துவிதக் கலப்பும் அது அநாதியா மாறும்.

48. *சென்றிவன்றா னென்றிற் சிவபூ ரணஞ்சிதையு*
*மன்றவன்றா னென்றுமெனி லந்நியமாம்* — இன்றிரண்டும்
*அற்றநிலை யேதென்னி லாதித்த னந்தன்விழிக்*
*குற்றமற நின்றதுபோற் கொள்.*

கொ—கூ: அன்று இவன் (தான்) சென்று ஒன்றில் சிவபூரணம் சிதையும்; இன்று அவன் (தான் வந்து) ஒன்றும் எனில் அந்நியம் ஆம்; (ஆயின், இவை) இரண்டும் அற்றநிலை ஏது? என்னில், (அது) அந்தன் விழிக்குற்றம் அற ஆதித்தன் நின்றதுபோல் (ஆகும் எனக்) கொள்.

ப—ரை: அன்று-(இறைவன், பெத்தம் முத்தி ஆகிய இரு வேறு நிலையிலும் ஆன்மாவுடன் அத்துவிதமாகக் கலந்து உபகரிப்பானாக, அவ்விரு நிலைகளுள்) பெத்த நிலைப்பட்டிருக்குங் காலத்திலே, இவன்சென்று ஒன்றில்-ஆன்மா தனது அறிவால் சிவனிடம் சென்று அடைந்து அவனோடு இரண்டறக் கலக்கும் எனக் கொண்டால், சிவ பூரணஞ் சிதையும் — (அதனால் அப்பெத்த நிலையில் ஆன்மா இறைவனுக்கு வெளியே இருந்தது எனக்கொள்ளக் கிடத்தலின்) சிவனது வியாபகத்தன்மை கெட்டுப்



போகும்; இன்று அவன் ஒன்றும் எனில் அந்நியம் ஆம் — முத்தி நிலையிலே இறைவன் ஆன்மாவிடம் வந்தடைந்து கலந்து நிற்பான் எனக் கொள்ளின், அதற்கு முந்திய பெத்தநிலையிலே அவன் ஆன்மாவுக்கு எவ்வித உபகாரமுஞ்செய்யாமல் வேறாயிருந்தவனாவன்; இரண்டும் அற்ற நிலை ஏது? என்னில் — (ஆன்மா சென்று கலத்தல் இறைவன் வந்து ஒன்றல் ஆகிய) இரண்டு முறைமையும் இல்லாமல் ஆன்மாவும் இறைவனும் இருவேறு நிலைகளிலும் கலந்துநின்ற முறைமைதான் யாது? என்றால், அந்தன் விழிக் குற்றம் அற ஆதித்தன் நின்றது போல் கொள் - (அது) குருடனது கண்ணிடத்துப் பொருந்திய தெரியாமையாகிய (படலக்) குற்றம் நீங்க அவனது கண்ணின் ஒளியும் சூரியனின் ஒளியும் இரண்டறக் கலந்து (உளதாகும் பயனை ஆன்மா அநுபவித்து) நின்ற தன்மைபோலும் எனக்கொள்வாயாக.

'தான்' இரண்டும் அசைகள்.

இங்குக் காட்டிய திருட்டாந்தத்தில் அந்தன் விழிக் குற்றமற நின்றமை ஆன்மாவின் நிலைக்கும், ஆதித்தன் விழிக்கு உபகாரியாய் நின்றமை இறைவனின் நிலைக்கும் உவமையாயின. இனி, ''அந்தன் விழி(யில்) ஆதித்தன் நின்றதுபோல்''எனவும் ''(அவ்) விழிக்குற்றம் அற ஆதித்தன் நின்றதுபோல்'' எனவும் அத்திருட்டாந்தம் இரண்டுபட வகுக்கக் கூடியதாய் முறையே ஆன்மாவின் பெத்த நிலைக்கும் முத்தி நிலைக்கும் சென்று பொருந்துவதுங் காண்க. குருடனது விழி படல மறைப்புக்காரணமாகச் சூரியனது ஒளியை உணராத காலத்தும், அச்சூரியனது ஒளி அக்கண்ணுடனே கூடிக் கிடந்தது. கண்படலம் நீங்கி அறியுஞ் சத்தி பெறுங்காலத்து, அதனோடு என்றுங் கூடிக்கிடந்த சூரியனது ஒளி புலனாகும். இது போல, பெத்தம்முத்தியாகிய இருவேறு நிலையிலும் எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரு தன்மையனேயாய் இறைவன் நீக்கமறக் கலந்து நிற்பன் எனவும், அதனால் ஆன்மா சென்றடைதலும் அவன் வந்து ஒன்றுதலுமாகிய புடை

பெயர்ச்சிகள் வேண்டியதில்லையெனவும், என்றும் உடனிருந்து உயிர்க்குயிராய்க் கலந்து வாழ்வித்துவரும் அவனைத், தன்னிடம் பொருந்திய குற்றமாகிய ஆணவ மறைப்பு அகலுங்கால் ஆன்மா அறியவும் அநுபவிக்கவுங் கூடிய தன்மையைப் பெறும் எனவுங் கொண்டு, அத்துவித சம்பந்தம் இடையில் வருவதன்று; அநாதியானதே யெனத்தெளிக.

இறைவன்ஒருவனே, ஒரே சமயத்திலேயே, ஒன்றாய் உடனாய் வேறாய் நிற்றலாகிய மூன்று உபகாரங்களினாலும் ஆன்மாவுக்கு அத்துவித முத்தியின்பம் அளித்து நிற்பன். "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம் போற் - காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்" (சூத். 11) எனச் சிவஞான போதமும், "காட்டக் கண்டிடுந் தன்மையுடைய கண்ணுக் - கேயுமுயிர் காட்டிக் கண்டிடுமாபோல ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்." (சூத், 11. க) எனச் சிவஞான சித்தியாரும், "அறிவொளிபோற் பிறிவரும் அத்துவிதமாகும்" (பாயிரம் 7) எனச் சிவப்பிரகாசமும் அம்மூவகையுபகாரமுந் தோன்றச் சிறப்புமிக்க திருட்டாந்தங்காட்டிச் செல்வது உணரத்தக்கது. இவையொப்ப, இச்செய்யுளிடத்தும் " ஆதித்தன் அந்தன் விழிக்குற்றமற நின்றதுபோல்" என வந்த திருட்டாந்தமும் மூவகை உபகாரமும் பொருந்திய அத்துவித முத்திநிலையை விளக்கி நிற்பது உய்த்துணரற்பாலது. விரிப்பிற் பெருகும்.

பொழிப்பு: (பெத்தம் முத்தி ஆகிய இருவேறு நிலைகளிலும் இறைவனையின்றி இயங்காத) ஆன்மா, பெத்தத்தில் இறைவனிடம் தானே சென்று அணைந்து நின்றது எனின், இறைவனது வியாபகத் தன்மைக்குக் குற்றமுண்டாகும் எனவும், முத்தியில் இறைவன் ஆன்மாவிடம் வந்து சேருவன் எனில், அதற்குமுன் அவன் ஆன்மாவுக்கு உபகாரஞ்செய்யாமல் வேறாய் இருந்தவனாவன் எனவும் கொள்ளக் கிடத்தலின், இந்த இரண்டு முரண்பட்ட முறைகளுமின்றிக், குருடனது கண்ணின் இருவேறு நிலைகளிலும் சூரியனது ஒளி பொருந்தி நின்ற முறைமைபோல, ஆன்மாவின் இருவேறு நிலைகளிலும் இறைவன் உபகாரஞ் செய்து நிற்பன்; எனக்கொள்வாயாக.



### மாணாக்கனது வேண்டுகோள்.

49. வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனுருத்
தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா—நீக்காப்
பதியினைப்போல் நித்தம் பசுபாச மென்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு.

கொ—கூ: வாக்கு மனம் இறந்த வான் கருணையாளன் உரு (கொண்டு) தாக்கு அற (+ஏ) நிற்கும் தனி முதல்வா, நீங்காப் பதியினைப் போல், பசு பாசம் (என்பவைகளும்) நித்தம் என்றாய்; (அங்ஙனமாயின்) கதி இடத்தும் (அம்) மூன்றினையும் காட்டு.

ப—ரை: வாக்கு மனம் இறந்த - பாச ஞானம் பசு ஞானங்களால் அறிதற் கரியனாய் அப்பாற்பட்டு நின்ற வான் கருணையாளன் உரு (கொண்டு) - எல்லையில்லாத (பரிசுத்தமான) பேரருளையுடைய இறைவனேயாய்த் திருமேனிகொண்டு, தாக்கு அற நிற்கும் தனி முதல்வா - பாசங்களினாலே பற்றப்படுதலின்றி எழுந்தருளியிருக்கும் ஞானாசாரிய சிரேட்டரே, நீங்காப் பதியினைப்போல் - யாவற்றிலும் எக்காலத்திலும் விட்டு நீங்காமல் (வியாபகமாய்) இருக்கும் இறைவனைப்போல, பசு பாசம் நித்தம் என்றாய் - ஆன்மாவும் மலமும் அழியா இயல்பின என்று அருளிச் செய்தீர், கதி இடத்தும் மூன்றினையும் காட்டு - (அங்ஙனமாயின்) முத்தி நிலையிலும் (பதி பசு பாசம் ஆகிய) அம்மூன்று பொருள்களும் அழியாமல் நிற்கின்ற முறைமையை அடியேனுக்கு விளக்கியருளுவீராக.

'நீங்கா' எனுஞ்சொல் எதுகைத்தொடை நோக்கி 'நீக்கா' எனும்வலித்தல் விகாரமாய் நின்றது. 'ஏ'-அசை.

பதி பசு பாசம் மூன்றும் எக்காலத்தும் (அழியாமல்) உள்ள பொருள்கள் என்பது சைவசித்தாந்தத் துணிவு. அங்ஙனமாயின் முத்திநிலையிலும் அவைமூன்றும் உளவா

தல் வேண்டும். ஆனால், ''அந்தன் விழிக்குற்றம் அற ஆதித்தன் நின்றதுபோற் கொள்'' என ஆசிரியர் கூறினாராக, அத்திருட்டாந்தத்தில் விழிக்குற்றம் அறுதல்போல ஆன்மாவின் ஆணவக்குற்றமும் முத்திநிலையில் அறும் என்றே அறியக்கிடத்தலின், அவ் ஆணவமாகிய பாசம்அற, ஏனைய பசுவும் பதியுமாகிய இரண்டு பொருள்களே உளவாமல்லது, முப்பொருளும் உளவாதல் எங்ஙனம்? என மாணவகனுக்கு ஐயம் எழுந்தது. எழவே, ''கதியிடத்து மூன்றினையுங் காட்டு'' என்று விண்ணப்பித்தானென்க. இதற்கு விடை மேல்வருஞ்செய்யுளிற் காண்க.

பொழிப்பு: ஏகதேசஞானங்களுக்கு அப்பாற்பட்டு நின்ற அருளுருவின் இறைவனேயாய்த் திருமேனி கொண்டு பாசத்தாற் பற்றப்படாது நின்ற ஞானாசாரிய சிரேட்டரே, யாவற்றிலும் எக்காலத்திலும் நிறைந்திருக்கும் பதியைப் போலப் பசுபாசமிரண்டும் அழியாவியல்பினவென்றீர்; அங்ஙனமாயின், பதி பசு பாசம் மூன்றும் முத்திநிலையிலும் அழியாதிருக்கும் முறைமையை விளக்கியருளுவீராக.

50. முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு — மெத்தவே
யின்பங் கொடுத்தலிறை யித்தைவிளை வித்தன்மல
மன்புடனே கண்டுகொளப் பா.

கொ—கூ: அப்பா, முத்திதனில் மூன்று முதலும் (யாம்) மொழிய (நீ)கேள், சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு; மெத்த (+ஏ) இன்பம் கொடுத்தல் இறை; இத்தை விளைவித்தல் மலம்; (இவ்வுண்மைகள் இங்ஙனமாதலை) அன்புடன் (+ஏ) (நீ) கண்டுகொள்

ப—ரை: அப்பா மாணாக்கனே, முத்திதனில் - ஆன்மாவுக்கு முத்திநிலை வந்தெய்துங் காலத்திலே, மூன்று முதலும் மொழிய கேள் - பதி பசு பாசம் ஆகிய மூன்று பொருள்களும் (அழிவின்றி) நித்தமாய் நிற்கும் தன்மையைச் சொல்லுகிறோம் கேட்பாயாக, சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு - தூய பரமுத்தி இன்பத்தை அநுபவித்திருப்பது ஆன்மாவாம்; மெத்த இன்பம் கொடுத்தல் இறை- இடையீடின்றி(அநுபவிக்குந் தோறும் புதியதாய், தெவிட்டாததாய்) அப்பேரின்பத்தைக் கொடுத்து நிற்பது சிவமாம்; இத்தை விளைவித்தல் மலம் - இப்பேரின்பத்தை ஆன்மா நுகரும்படி அடைவித்து நிற்பது மலமாம்; அன்புடனே கண்டுகொள்-(இவ்வுண்மைகள் இங்ஙனமாதலை)அயரா அன்பினாலே அறிந்துஅநுபவிப்பாயாக.

''பதியினைப்போல் பசு பாசம் நித்தம் என்றாய்; கதியிடத்து மூன்றினையும் காட்டு'' என மாணவகன் வேண்டினனாக, இப்பாடலினால் அம்மூன்று முதலும் முத்திக் காலத்தும் உளவாதலை ஆசிரியர் கூறியருளுகின்றார்.

முத்திக் காலத்தில் உளவாகிய மூன்று முதல்களுள் பதி பசு ஆகிய இரண்டினதும் அழிவற்ற தன்மைகளைக் கூறுமுகத்தால், பேரின்பத்தைக் கொடுத்துநிற்பது பதி எனவும் அப் பேரின்பத்தை அநுபவித்து நிற்பது பசு எனவும் காட்டிய ஆசிரியர், பாசமும் உளதாம் என்பதை விளக்கும்போது ''இத்தை விளைவித்தல் மலம்'' என்கின்றார்.

இன்பத்தைக் கொடுத்து நிற்பவனாகிய பதியும், அதனை அநுபவித்து நிற்பதாகிய பசுவும் அழிவின்றி உளவாம் என்பது வெளிப்படை. ஆனால், முத்தியடைதற்கு 'ஆணவம்' இல்லையாதல் வேண்டும் எனவும், 'மும்மலமும்' தீர்வாக வேண்டும் எனவும் கூறப்படும் இடங்கள் இந் நூலுட் பலவுள. "இருளானது தீர அருளானது சிவத்தே அணுவை ஆக்கும்'' எனவும், ''சித்தமலம் அற்றார் முத்திதனில் செறிந்திடுவர்''எனவும், அந்தன் விழிக் குற்றமற ஆதித்தன் நின்றது போல் (ஆன்மாவிடம் பொருந்திய ஆணவக் குற்றமறப்) பதி பொருந்தி நிற்கும்'' எனவும் முன்வந்த செய்யுள்களால் முத்தியில் ஆணவமில்லையாதல் கூறப்பட்டது. அன்றி, '' மகரம்

உதரம்'' என்றும், ''அடிக்கீழ் முயலகனுர் தங்கும் மகரம்'' என்றும், ''ஊற்றமா ஊன்று மலர்ப் பதத்தே உற்ற திரோதம்'' என்றும், ''மலம் சாய அமுக்கி'' என்றும் ''மும்மலத்தை மோசித்து'' என்றும் வரும்பகுதிகள் மும்மல நாசத்தையுமே குறிப்பிட்டன. இங்ஙனம் ஆணவம் மாத்திரமன்று, மும்மலமுமே முத்தியடைந்த காலத்து இல்லையாம் எனக்கூறிய ஆசிரியர், மலமும் உளவாய்ப் பேரின்பத்தையும் விளைவித்து நிற்கும் என்னும் கருத்தில் ''இத்தை விளைவித்தல் மலம்'' என உரைத்தமை பொருந்துமா? முன்னுக்குப் பின் முரணுதா? என்ற ஐயப்பாடுகளை வருவிக்கும். அவை சிந்தித்து உணரத்தக்கவை.

பதி பசு பாசம் மூன்றும் நித்தம் என்பது சைவ சித்தாந்தம். அதுபற்றி, ''முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்'' என்றவர், பாசமும் உளது என்றே கொண்டார். எனவே, ''இத்தை விளைவித்தல் மலம்'' என்றதில் 'மலம்' பாசத்தையே குறித்து நின்றது; அப்பாசம் ஆணவம் மாத்திரம் அன்று; அது, ஆணவம் 'கன்மம் மாயை என்னும் மூன்றுமேயாம். ஆதலின், முத்தி நிலையிலும் மும்மலமும் உளவாதல் வேண்டும். இவற்றுள் ஆணவம் உளவாதலை முதலில் ஆராய்வாம்.

சூரியன் உதிக்குமுன் இருந்த இருள் அது உதித்தவுடன் விட்டுநீங்கி வேறெங்கும் செல்வதில்லை. மேலும், சூரியன் இல்லாதபோது காணப்படும் அவ்விருள் வேறெங்கிருந்தும் அங்கு வந்துசேர்வதில்லை. எனவே; அவ்விருள் அவ்விடத்திலேயே ஒளியினுள் சத்திகெட்டு அடங்கியும், ஒளியில்லாத காலத்தில் தோன்றியும் அழிவற்று நின்றது. அவ்விருளேபோல, ஆணவமும் பெத்த நிலையில் மேலிட்டுத் தோன்றியும் முத்திநிலையில் (இருந்தும் இல்லையெனும்படி ) தன் சத்தி கெட்டு அடங்கியும் அழிவின்றி உளதாம் என்க.

''ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும்'' (கொடிக்கவி) எனவும்,



"சேணுர் இருள்வடிவு செங்கதிரோன் பால்நிற்கக்
காணு தொழியுங் கணக்கேபோல்—ஆணவத்தின்
ஆதிகுறையாமல் என்பால் அணுகாமல்
நீதி நிறுத்தும் நிலைபோற்றி......" (போற்றிப் பஃறொடை)

எனவும் வருவன இங்குக்காட்டிய உண்மைக்குச் சான்ரும்.

மேலும், 'முத்திதனில்' என்றதற்கு 'முத்தியடைந்த காலத்தில்' என்றே பொருள் கொள்ளப்படுதலின், முத்தான்மாவில் வலி கெட்டுநின்ற ஆணவத்தை ஆண்டில்லையென்றே கொள்ளினும், அதேகாலத்தில் தனது பலவேறு சத்திகளால் பெத்தான்மாக்களிடத்தில் தன்னியல்பு குறையாமல் அழிவின்றி உளதாய் நிற்கும் ஆதலின், அவ்வாணவம் நித்தியமென்பது துணியப்படும்.

இனி, இங்ஙனம் நின்ற ஆணவமே போல கன்மம் மாயை என்பனவும் ஆன்மா முத்தியடைந்த அக்காலத்தில் ஏனைப்பெத்தரிடத்துக் காணப்படுதலால், பாசம் மூன்றும் நித்தம் என்க.

பாசங்கள் மூன்றும் ஆன்மாவை அகன்று நித்தமாய் நின்றன என்று கண்டோம். அங்ஙனம் அகன்று நின்ற அவை (இத்தை விளைவித்தல் -) பேரின்பத்தை ஆன்மாவிடத்தில் உளதாக்கி அநுபவிப்பித்தல் எங்ஙனம் என்பது இங்கு ஆராயத்தக்கது. பிறர் நமக்குத் துன்பஞ் செய்யாமையால் நாம் சற்றே சுகித்திருக்க முடிகிறது. அவரது துன்பஞ் செய்யாமையாகிய உதவி நமது சுகவாழ்வுக்குக் காரணமாதல் ஒருதலை. ஆகவே அவர் நம்மை வாழ்விப்பவர் ஆவர். இவரே போலப், பாசங்களும் ஆன்மாவை அகன்று நிற்றலாலும், அங்ஙனம் நிற்றலினுல் மயக்கஞ் செய்யாமையாகிய உதவி புரிதலினுலும், ஆன்மாவினிடத்துப் பேரின்பத்தை விளைவிக்கின்றன வென்க. இந்நுணுக்கத்தை உள்ளிடு பொருளாயடக்கி ''மலம் தானே செய்யவில்லை: செய்

விக்கின்றது என்னும் பொருள்பட'' (விளைத்தல் மலம் என்னுமல்) ''விளைவித்தல் மலம்'' எனப் பிறவினை வாய் பாட்டான் உரைத்த நயம் போற்றுதற்குரியது.

இங்குக் காட்டியவற்றால் மும்மலங்களும் முத்தான் மாவைவிட்டு நீங்குமென்பதும், அங்ஙனம் நீங்குமாயி னும் அவை அழிவின்றி உளவாம் என்பதும் விளக்கப்பட் டன. எனவே, முத்திதனில் மூன்று முதலும்'' என்றதற்கு ''ஆன்மா முத்தியடைத்த காலத்தில் பதி பசு பாசங்கள் அழிவின்றி உள என்றும், அவற்றுள் பாசம் ஆகிய மும்மல மும் ஆன்மாவை விட்டு நீங்கிய நிலையிலே உள என்றும் பொருள்கொண்டு, ''இத்தை விளைவித்தல் மலம்'' என் றதை ''அம் மும்மலமும் நீங்கி நிற்றலினால் ஆன்மாவுக் குப் பேரின்பத்தை விளைவித்து நிற்கும்'' எனக் கருதி யமைக.

பொழிப்பு: ஆன்மா முத்தியடையுங் காலத்திலே பதிமுதலிய மூன்று பொருள்களும் அழிவின்றி நிற்குந் தன்மையைச் சொல்லுங்கால், ஆன்மா பேரின்பத்தை அநுபவித்தலினாலும், பதி ஆன்மாவுக்கு அவ்வின்பத் தைக் கொடுத்து வருதலினாலும், மலம் ஆன்மாவினி டத்து அவ்வின்பத்தை விளைவித்து வருதலினாலும் அவை மூன்றும் நித்தமாம். (என்பது தெளியப்படும்.) இவ் வுண்மையை நீ கண்டுணர்வாயாக.

## முத்திக்கு வழி

### குருலிங்க சங்கம வழிபாடு

51. அப்பாவிம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பா யருளாலே செப்பக்கே—ளொப்பில்
குருலிங்க வேடமெனக் கூறிலிவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண்.

கொ—கூ: '' அப்பா இம்முத்திக்கு அழியாத கார ணம் (தான்) அருளால் (+ஏ) செப்பாய்.'' (என மாண வகன் வேண்டினாக, ஞானசாரியர்;) ''செப்பக்கேள், (அக்காரணந்தான்) ஒப்பு இல் குரு லிங்கம் வேடம் என (ஆகமங்கள்) கூறில், இவை கொண்டார், கரு ஒன்றி நில்லார்கள்; (என்ற உண்மையை நீ) காண் (என்றார்.)



ப—ரை: அப்பா—ஞானசாரிய முதல்வரே, இம்முத் திக்கு அழியாத காரணம் அருளால் செப்பாய்—இப்பர முத்தியை அடைந்து வாழ்தற்கு நிலையான வாயிலை (-வழியினை)க் கருணை கொண்டு சொல்லியருளுவீராக; (என்று மாணவகன் வேண்டினாக, ஞானசாரியர்;) செப்பக் கேள்—அதனைச் சொல்லுகிறோம் கேட்பாயாக, ஒப்பு இல் லிங்கம் வேடம் என கூறில்—(அவ்வாயில்) நிக ரில்லாத ஞானசாரியர் சிவலிங்கம் மெய்யடியார் என் னும் மூவிடத்தும் வழிபாடியற்றலேயாம் எனச் சிவாக மங்கள் கூறுமாயின், இவை கொண்டார்—இந்த மூவிடத் தும் வழிபாடியற்றலை விரதமாகக் கொண்டவர்கள், கரு ஒன்றி நில்லார்கள்—கருப்பத்திலே பொருந்திப் பிறந்து இறந்து உழலமாட்டார்கள் என்ற உண்மையை நீ உணர் வாயாக (என்றார்).

'தான்' 'ஏ' என்பன அசைகள். வேடம், சங்கமம், மெய்யடியார் என்பன ஒரு பொருள் குறித்த சொற்கள்.

மெய்ஞ்ஞானத்தாற் சீவன் முத்திநிலையடைந்தவர் களுக்கும் மாயா காரியமான உடம்பு இருக்கும் வரைக் கும் பிராரத்த வினை அவ்வுடம்பை ஒட்டிநிற்கும். அதனை அநுபவிக்குங்கால் விருப்பு வெறுப்பு உளவாம். அவை உளவாகவே அவற்றால் மாயாதத்துவக் காட்சியும் ஏக தேச உணர்வாகிய பாசஞான பசுஞானங்களும் மறித் தும் உளவாகிப் பிறவித்துன்பத்துக்கு ஏதுவாம். ஆகவே, இங்ஙனம் கீழ்நிலைப் படுத்தும் அம்மலங்களைப் பற்றற நீக்குதற்கு வழிகூறுவார் ''ஒப்பு இல் குரு லிங்கம் வேடம் எனக் கூறில் இவை கொண்டார் கரு ஒன்றி நில்லார்கள்'' என்றாரென்க.

பொழிப்பு: மாணவகன்; பரமுத்தி நிலைத்தற்குரிய வாயில் யாதென வேண்ட, ஞானசாரியர்; சிவாகமங்கள்

உரைக்கும் குரு லிங்க சங்கம வழிபாடியற்றலே வாயில் எனவும், அதுகொண்டார் பிறவியின்றிப் பரமுத்தியில் நிலைத்திருப்பரெனவும் கூறினர்.

### குருலிங்க சங்கம வழிபாட்டு முறை.

52. கற்றா மனம்போற் கசிந்துகசிந் தேயுருகி
யுற்றாசான் லிங்க முயர்வேடம் — பற்றாக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனி னின்றிடுவர் பார்.

கொ—கூ: முத்தித் தலைவர், ஆசான் லிங்கம் உயர் வேடம் பற்று ஆக, கன்று ஆ மனம் போல கசிந்து கசிந்து (+ஏ) உருகி உற்று, முழு மலத்தை மோசிக்கும் பத்தி தனில் நின்றிடுவர்; (ஆதலால் நீயும் இவ் வழிபாட்டு முறையைப்) பார்.

ப—ரை: முத்தித் தலைவர் - சீவன் முத்தரானோர், ஆசான் லிங்கம் உயர் வேடம் பற்று ஆக - ஞானாசாரியனையும் சிவலிங்கப் பெருமானையும் பக்குவத்தாலுயர்ந்த மெய்யடியார்களையும் பற்றுக் கோடாகக் கொண்டு, கன்று ஆ மனம் போல கசிந்து கசிந்து உருகி உற்று - தன் கன்றை நினைந்து அன்பு சுரக்கும் பசுவினது உள்ளத்தைப்போல (அம் மூவிடத்தும்) அயரா அன்பு மீக்கூர மனம் நெக்கு நெக்குருகிப் பொருந்தி, முழுமலத்தை மோசிக்கும் பத்திதனில் நின்றிடுவர்; பார் - (சீவன் முத்திநிலையில் நிற்குமளவும் வந்து பொருந்தும்) மல வாசனை முழுவதும் நீங்குதற்குரிய பத்தி நெறியிலே ஒழுகுவர்; ஆதலால், நீயும் அவ்வழிபாட்டு முறையை மேற்கொள்வாயாக. (- நோக்கி இயற்றுவாயாக).

'ஏ' அசை. ஞானமார்க்கத்தாரது மலவாசனை முற்றுமொழிதற்கும் அது காரணமாக முத்திப்பேறு முதிர்ந்து விளைதற்கும் குருலிங்க சங்கம வழிபாடு இன்றியமையாததாயிற்று. ஆகவே, அவ்வழிபாட்டுமுறை சிறப்புறவேண்டுமென்பார் 'கற்றாமனம்போலக் கசிந்து கசிந்துருகி' நிற்கும் பத்தி வேண்டும் என்றார்.



சொரூப சிவம், தடத்தசிவம், பரஞானத்தையுடையோர், நாயன்மார்கள் முதலியோர் சிவபேதமாய் நின்ற குருமூர்த்தமேயாம் எனத் தெளிந்து, குருவை வழிபடுதல் வேண்டும். அதனால், சிவன் அக்குருவை அதிட்டித்து நின்று, தீட்சைக் கிரமங்களினாலே மலம் நீக்கித் தன் வண்ணமாக்குவன். ஆதலின், குருவழிபாடு இன்றியமையாததாயிற்று.

ஆலயத்துள் இருக்கும் (சிவ)லிங்கம் சிவமே எனக் கண்டு வழிபாடியற்றும் சரியாவான்களுக்கு இறைவன் வெளிப்படாது நின்றருளுவன்; கிரியாவான்களுக்கும் யோகியர்க்கும் கடைந்த வழித் தோன்றும் எரியும் கறந்த வழித் தோன்றும் பாலும்போல அவர் விரும்பிய வடிவாய் அப்போதப்போது தோன்றியருள் செய்வன். ஆனால், ஞானமார்க்கத்தாருக்கு கன்றையெண்ணிய பசுவின் முலை பால் சொரிவதுபோலக் கருணை மிகக் கொண்டு எப்போதும் வெளிப்பட்டு நின்று அருள் புரிவன் ஆதலின், லிங்கவழிபாடு இன்றியமையாததாயிற்று.

மெய்யடியார்கள் அகமும் புறமுந் தூயவராய் இறைவனது வேடமாகிய திருநீறு கண்டிகை முதலிய வடிவத்தைப் பொருந்தியவராவர். காமக் கிழத்தியரது ஒழுக்கமும் அவர் அணியும் ஆடை சந்தனம் முதலியனவும் காமுகரை ஈர்த்து இன்பஞ்செய்தல் போல, அம்மெய்யடியாரது ஒழுக்கமும் அணிகளும் ஞானியரை வசீகரித்து அவர் நெறியில் வழுவாது நிறுத்தி இன்பஞ்செய்யு மாதலானும், குறியிறந்து நின்ற இறைவன் அவர்களிடத்துத் தயிரின் கண் நெய்போல விளங்கித் தோன்றுவனாதலானும் மெய்யடியார் வழிபாடு(மிகவும்) இன்றியமையாததாயிற்று.

பொழிப்பு: சீவன் முத்தர்கள், குருலிங்க சங்கமங்களைப் பற்றுக்கோடாகக் கொண்டு, கன்றையுடைய பசுவைப்போல அம்மூவிடத்தும் இடையீடுபடாத அன்

பினால் மனம் நெக்கு நெக்குருகிப் பொருந்தி, மலம் முற்றாக நீங்குதற்குரிய பத்தி வழிப்படுவர்; நீயும் அவ்வழி நோக்கி ஒழுகுவாயாக.

53. வாழ்ந்தே னருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே யலையாமல் மேதினியில்—சூழ்ந்துவிடா
வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
யுண்மைத் தவப்பயனே யுற்று.

கொ—கூ: (தரிசித்த மெய்யடியார்கள்) சூழ்ந்து விடா வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே, உண்மைத்தவப்பயனே, அருட்கடலே, (அடியேன்) வற்றாப் பவக் கடலில் வீழ்ந்து (+ஏ) மேதினியில் அலையாமல் (முத்தியளிக்கும் உமது திருவடியை) உற்று வாழ்ந்தேன்.

ப—ரை: சூழ்ந்து விடா வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே-தரிசித்த மெய்யடியார்கள் சூழ்ந்து (பின்னர்)விட்டு நீங்காதபடி திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருக்கும் சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடைய மெய்கண்ட நாதனே, உண்மைத் தவப்பயனே - மெய்த்தவம் உடையவர் தம் தவத்தின் பயனாய் அடைதற்கு உரியவனே, அருட்கடலே - கிருபா சமுத்திரமே, வற்றாப் பவக்கடலில் வீழ்ந்து (+ஏ) மேதினியில் அலையாமல் உற்றுவாழ்ந்தேன் - அடியேன் குறைவுபடாத பிறவியாகிய சமுத்திரத்தில் அழுந்தி உலகவாழ்வில் (மயங்கிச்) சீரழிந்து துன்புறாமல், தேவரீரது திருவடியை (அடைந்து) பற்றிநின்று பேரின்ப வாழ்வெய்தினேன்.

ஏ—அசை. இந்நூலுட் காட்டிய உண்மைகளை மெய்கண்ட தேவ நாயனார் உபதேசித்தருளினாராக, அதனைத் தந்தவப்பயனாய்க் கேட்டு உய்ந்த திருவதிகை மனவாசகங்கடந்தார் ஆனந்த பரவசத்தராய் இங்ஙனம் நன்றியறிதலோடு துதித்தனரென்க. உண்மைச் சரியை கிரியை யோகம் ஆகிய சிவபுண்ணியங்களே 'மெய்த்தவம்' என்பதும், அத்தவவிசேடங் காரணமாக ஞானாசாரியரது தரி



சனம் உளதாகும் என்பதும், அவ் ஆசாரியாரது அனுக்கிரகத்தாலே - அவரது தீட்சைக் கிரமங்களினாலே பதிஞானம் பெறற்பாலதென்பதும், அங்ஙனம் பெற்ற பதிஞானத்தாலேயே பரமுத்தியாகிய பேரின்பவாழ் வெய்தலா மென்பதும் (ஆசாரிய வணக்கங் கூறும்) இச்செய்யுளானறியக் கிடந்தமையுணர்க.

பொழிப்பு: தரிசித்த மெய்யடியார்கள் சூழ்ந்து விட்டு நீங்காதபடி திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளிய சுவேதவனப் பெருமாளென்னும் மெய்கண்ட தேவரே, தவத்தின்பயனாய் அடைதற்குரியவரே, கிருபா சமுத்திரமே, நான் பிறவிக்கடலில் அழுந்தி உலகவாழ்வில் மயங்கித்துன்புறாமல் தேவரீரது திருவடியைப்பற்றி நின்று பேரின்ப வாழ் வெய்தினேன்.

54. மன்னதிகை வாழும் மனவா சகங்கடந்தான்
மின்னனையார் வாழ்விலுறா மெய்கண்டான்—பன்மறைகள்
வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மைவிளக் கஞ்செய்தா னுற்று.

கொ—கூ: மன் அதிகை வாழும் மனவாசகம் கடந்தான், மின் அனையார் வாழ்வில் உறா மெய்கண்டான் (திருவடிகளை) உற்று, பன்(னும்)மறைகள் வண்மை தரும் ஆகமநூல்வைத்த பொருள் வழுவா(+த) உண்மை விளக்கம் செய்தான்.

ப—ரை: மன் அதிகை வாழும் மனவாசகம் கடந்தான் - (பலவளங்களாலும்) தலைமைப்பாடுடைய திருவதிகை என்னும் பதியில் எழுந்தருளிய மனவாசகம் கடந்த தேவநாயனார், மின் அனையார் வாழ்வில் உறா மெய்கண்டான் உற்று - மின்னலை யொப்பப் பிறந்தும் இறந்தும் உழலும் பெத்தான்மாக்களது உலகவாழ்வில் பொருந்தி நில்லாத மெய்கண்ட தேவநாயனாரது திருவடிகளை (மனம்மொழி மெய்களினால் துதித்து)ச் சேர்ந்து நின்று, பன் மறைகள் வண்மைதரும் ஆகம நூல்வைத்த பொருள் வழுவா - சிறப்பித்துக் கூறுகின்ற வேதாந்த

(-ஞானகாண்டத்து)வளத்தைவகுத்துஉரைப்பனவாகிய சிவாகமங்களிலே உள்ள பொருளியல்புகளுக்கு மாறு படாத, உண்மை விளக்கம் செய்தான் - (இவ்) 'உண்மை விளக்கம்' என்னும் மெய்கண்ட சாத்திர நூலை அருளிச் செய்தார்.

காப்புச்செய்யுளில் "வண்மைதரும் ஆகம நூல் வைத்த பொருள் வழுவா உண்மை விளக்கம்" எனத் தொடங்கிய ஆசிரியர் நூலை முடிக்கும் இவ்விடத்தும் அங்ஙனமே "வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா உண்மை விளக்கம்' எனக் கூறு முகத்தால், இந் நூலுட் கூறப்பட்டன எல்லாம் சிவாகமங்களுட் காணப் பட்ட உண்மைகளே என வலியுறுத்தினரென்க.

திருஞானசம்பந்த நாயனாரவர்கள் தமது தேவாரத் திருமுறையிலே (பதிக இறுதிதோறும்) வரும் திருக் கடைகாப்பில் தமது பெயரைக் குறிப்பிட்டுள்ளார். அங் ஙனமே இச்செய்யுளும் அமைதலின் இஃது இந்நூலுக் கொரு கடைகாப்பாகக் கொள்ளத்தக்கது.

பொழிப்பு: திருவதிகை மனவாசகங் கடந்த தேவ நாயனார் (பெத்தநிலைப்படும் உலகத்தாரது வாழ்விற் பொருந்தாத) மெய்கண்ட தேவநாயனாரது திருவடி களைப் பற்றி நின்று வேதாந்த சிவாகமங்களிலே சொல் லப்பட்ட உண்மைகளுக்கு மாறுபாடில்லாத (இவ்) "உண்மை விளக்கம்" என்னும் சித்தாந்தநூலை அருளிச் செய்தார்.

உண்மை விளக்கம்
புத்துரை
முற்றிற்று.

திருவதிகை மனவாசகங்கடந்த தேவநாயனார்
திருவடி வாழ்க.
திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டதேவநாயனார்
திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்

---

# அநுபந்தம்

உண்மை விளக்க(க்காப்புச் செய்யுளில் வரும் 'திண்மதம்' என்பதன்) உரை பற்றிப் புலவர் சி. சின்னையா அவர்கள் 14-12-62ல் வெளியாய இந்துசாதன இதழில் எழுப்பிய (சந்தேகப்) பிரச்சினை.

"7-12-62ம் தேதி இந்து சாதன இதழில் சித்தாந்த பண்டிதர், சைவப்புலவர், திரு. இ. செல்லத்துரை அவர்கள் சைவசித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றான "உண்மை விளக்கம்" இதற்கு உரை எழுதியிருந்தார்.

அதில் காப்புச் செய்யுளாகிய வெண்பாவில் வருகின்ற. "திண் மதம்" என்பதற்கு ("ஞானசத்தி, கிரியா சத்தி ஆகிய இரண்டு) வலிய மதங்களும்" என்று காணப்பெறுகின்றது.

யானைக்கு, கரம், கன்னம், கோசம் ஆகிய மூன்றிடங்களினின் றும் மதம் வருவதாதலின் யானை வடிவத்தையுடைய விநாயகப் பெருமானுக்கு மும்மதம் பொழியும் மூர்த்தி எனக் கூறிவருவது மரபு.

"அறிவிச்சை தொழிலென்றோதும், மதம் பூத்த விநாயகன்" என்று நாவலர் ஐயா அவர்கள் விநாயக வணக்கம் சொல்லியிருக் கின்றார்.

"ஒருகொம் பிருசெவி மும்மதம் என்று நாவலர் ஐயா அவர் களால் உரையெழுதப் பெற்றுள்ள மருதூரந்தாதி" நூலாசிரியர் அவர்கள் காப்புச் செய்யுளில் கூறுகின்றார்.

இன்னும் மும்மதம் எனக் கூறியிருப்பவைகளை உதாரணமாக எழுதுகில் நூற்றுக்கணக்கில் எழுதலாம். தேவையில்லை.

இந்துசாதன இதழ் மூலமாக சைவப்புலவர் திரு. செல்லத்துரை அவர்கள் தயவுசெய்து "இரண்டு மதங்கள்" என்று எழுதியதற்கு ஆதாரங்களை எழுதிச் சைவ நன்மக்களைத் திருப்தி பெறச் செய்யட்டும்"

வணக்கம்.

கச்சாய்.
10-12-62

சி. சின்னையா
ஆசிரியர்

புலவரவர்களது (சந்தேகப்) பிரச்சினையை உவந்தேற்று, 21 - 12 - 62-ல் வெளியாய இந்துசாதன இதழிற் பிரசுரித்த

## விளக்கவுரை

"14 – 12 – 62ல் வெளியிடப்பெற்ற 'இந்துசாதன'த்தின் மூலம் 'உண்மை விளக்கம் உரைபற்றி விளக்கம்' என்னுந் தலைப்பில் ஆசிரியர் திரு. சி. சின்னையா அவர்கள் எழுப்பிய பிரச்சினையை உவந்தேற்று என் சிற்றறிவுக் கெட்டிய வரையில் இவ்விளக்கத்தை எழுதுகிறேன்; பெரியோர் குணங்கொள்வாராக.

உண்மை விளக்கக் காப்புச்செய்யுளில் விநாயகர் 'தந்திமுகன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளார். அதனால் யானையின் முகம்மாத்திரமே விநாயகர் உருவில் ஒப்ப அமைந்துள்ளதென்பதும், அதுபற்றி அம் முகத்தினின்றும் பில்குவனவாகிய கன்னமதம் கபோலமதம் ஆகிய இரண்டுமே கொள்ளப்படுவன வல்லது ஏனைக்கோச மதத்தையும் சேர்த்து மூன்றாகக் கணித்தல் பொருந்தாதென்பதும், உய்த்துணரத் தக்கன. எனவே மதம் என்பதற்குச் சத்தி எனப் பொருள்கொண்டு, பிரணவப் பொருளாய் அதுவே உருவாய் அமைந்த விநாயகப்பெருமானுக்கு அங்ஙனம் அமைதற்கியைந்து நின்ற கிரியை ஞானம் என்பவற்றைக் குறிப்பிடுமாற்றால் 'திண்மதம்' என்பதற்குக் '(கிரியா சத்தி ஞானசத்தி ஆகிய இரண்டு) வலிய மதங்களும்" என உரையெழுத நேர்ந்தது. [அங்ஙனம் என்மதம் நாட்டி எழுதுமிடத்தும், சிவகுமார மூர்த்தமாய், அறிவு இச்சை தொழில் மூன்றும் உடையராய்ப், பரிபூரணராகிய விநாயகக் கடவுளுக்குக் குறைவுபாடு உரைத்ததாய் அமைந்துவிடக் கூடாதே என அஞ்சி, சிறப்பித்துரைத்த அவ்விரு மதங்களையும் நீக்கி வாசித்தற்குரியனவாய் அடைப்புக் குறிகளுக்கு உட்படுத்திப், பின் 'வலிய மதங்கள்' எனப் பொதுவாயுரைத்தமையுணரத்தக்கது. எனவே, நாவலர் ஐயா அவர்களது உரையுடனும் ஏனைப் பெரியோரது கருத்துக்களுடனும் ஈண்டு முரணிக்கிடந்த தொன்றில்லையென்க.]

இங்கே கூறியவற்றுக்கு ஆதாரம்: (அ) சிவப்பிரகாசக் காப்புச் செய்யுளுக்குத் திரு. மு. திருவிளங்கம் அவர்கள் எழுதிய உரையின் குறிப்பு 1ல் "தானம் – மதம்; ஞானசத்தி கிரியாசத்திகளைக் குறிக்கும் யானை உறுப்பு கழுத்தின்கீழ் இன்மையால், முகத்திலுள்ள இருமதமுமே ஞானசத்தி கிரியாசத்தி எனக் கொள்ளப்பட்டன விநாயகக் கடவுளது வடிவம் ஞானசத்தி கிரியாசத்திகளாலாய வடிவமாதலின் அச்சத்திகளே இருமதமுமாம்" எனத் தெள்ளத் தெளிய விளக்கப்பட்டுள்ளமை காண்க.



(ஆ) விநாயகருக்குச் சத்திகள் கிரியாசத்தி ஞானசத்தி என இரண்டுளவாதல் வைதிக சைவசிகாமணி ச. குமாரசாமிக்குருக்கள் எழுதிய விநாயக பரத்துவம் என்னும் நூலிலுள்ள சித்தி புத்தி திருமண மூர்த்தி என்னும் பாடத்தில் காணத்தக்கது.

குறிப்பு: சைவசித்தாந்த நூல்கள் கூறும் முடிந்த முடிபான பொருள்களும் அவற்றின் நுணுக்கங்களும் எமது மயக்க அறிவால் அளந்தறிதற் கரியவை; ஆணவ முனைப்பகன்றாருக்கே வெட்டவெளிச்சமானவை. அங்ஙனமாகவும் இளஞ்சைவப்புலவர் தேர்வுக்குத் தோற்றும் மாணவரது நன்மைகருதி, எழுதாமல் இருக்க முடியாமல், பெரியோரது பழைய உரைகளை அடியொற்றி இவ்வுண்மை விளக்கவுரை எழுத வேண்டியதாயிற்று. ஆதலால், ஆசிரியர் திரு. சி. சின்னையா அவர்களைப் போன்ற நேயர்களும் நல்லறிவாளர்களுமான பெரியோர்கள் எனதுஉரை இழுக்கின்றி அமைதற் பொருட்டு எனது ஐயந் தீர்த்தும் தீர்ப்பித்தும் உதவுவார்களாக."

சிறுப்பிட்டி. இ. செல்லத்துரை
18-12-62

---

பி. கு:—

இனி,

"சத்திதன் வடிவே தென்னில்
தடையிலா ஞான மாகும்
உய்த்திடும் இச்சை செய்தி
இவை ஞானத் துளவோ என்னின்
எத்திறம் ஞான முள்ள
தத்திறம் இச்சை செய்தி
வைத்தலான் மறைப்பின் ஞானன்
மருவிடும் கிரியை யெல்லாம்."

எனவரும் சிவஞானசித்தியார் சுபக்கச் செய்யுளால் ஞானசத்தியினின்றே ஏனைய சத்திகள் உளவாம் என்பதும், அச்சத்திகளெல்லாம் ஞானசத்தியினுள் அடக்கமாம் என்பதும், அதனால் ஞானசத்தி ஒன்றைமாத்திரம் இறைவன் உடையன் எனக் கூறுங்காலும் இறைவனுக்குக் குறைவுபாடுரைத்தமை யாகாதென்பதும் காணக் கிடத்தலால், விநாயகருக்கு மதமாவன ஞானம் கிரியை இரண்டுமே என்று கொள்ளுதலால் வரக்கடவதாகிய இழுக்கும் குறைவுபாடும் இல்லையாம். அவையில்லையாகவே, மும்மதமெனக் கொள்வாரோடு இருமதமெனக் கொள்வாரும் அன்றி (ஞானமாகிய) ஒரு மதமெனக் கொள்வாருங்கூட முரணிக்கிடந்தாரில்லையாமெனத் தெளிக.

அட்டைப்படம்

# நடராசர் நடன விளக்கம்

(செய்யுள் 32—36)

## பஞ்சாக்கரத் திருமேனி

| தூலபஞ்சாக்கரம் | சூக்குமபஞ்சாக்கரம்: |
| --- | --- |
| ந—திருவடி | சி—உடுக்கேந்திய திருக்கரம் |
| ம—திருவயிறு | வ—வீசியதிருக்கரம் |
| சி—திருத்தோள் | ய—அஞ்சலெனஅமைத்ததிருக்கரம் |
| வ—திருமுகம் | ந— அக்கினியேந்தியதிருக்கரம் |
| ய—திருமுடி | ம—முயலகனை அழுத்தியதிருப்பாதம் |

'ஓம்'—திருவாசி

பஞ்சாக்கரம்—திருவாசியின் உள்ளொளி

## ஊனநடனம்

படைத்தல் — உடுக்கு ஏந்திய திருக்கரம்
காத்தல் — அஞ்சலென அமைத்த திருக்கரம்
அழித்தல் — அக்கினி ஏந்திய திருக்கரம்
மறைத்தல் — ஊன்றிய திருவடி
அருளல் — தூக்கிய திருவடி

## ஞானநடனம்

பக்குவான்மாவுக்கு;

மாயாமலம் நீக்குதல் — உடுக்கு ஏந்திய திருக்கரம்
கன்மமலம் நீக்குதல் — அக்கினியேந்திய திருக்கரம்
ஆணவமலம் நீக்குதல் — ஊன்றிய திருவடி
அருளேதநுவாக நிறுத்தல் — தூக்கிய திருவடி
பேரின்பமளித்து அழுத்துதல் — அஞ்சலென அமைத்ததிருக்கரம்

(ப்பத்தாறு தத்துவங்கள்

# முப்பத்தாறு தத்துவங்கள்

[செய்யுள்: 4 தொடக்கம் 21 வரை]

## ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கு :-

I பூதங்கள் ஐந்து:

| | நிலம் | நீர் | தீ | காற்று | ஆகாயம் |
|---|---|---|---|---|---|
| அவற்றின் உருவம் | நாற்கோணம் | மதியின்பாதி | முக்கோணம் | அறுகோணம் | வட்டம் |
| அவற்றின் நிறம் | பொன் | வெண்மை | சிவப்பு | கருமை | தூமம் |
| அவற்றின் எழுத்து | ல | வ | ர | ய | அ |
| அவற்றின் குறி | வச்சிரம் | தாமரை | சுவத்திகம் | அறுபுள்ளி | அமுதவிந்து |
| அவற்றின் அதிதெய்வம் | பிரமன் | விஷ்ணு | உருத்திரன் | மகேசுரன் | சதாசிவன் |
| அத்தெய்வங்களின் தொழில் | படைத்தல் | காத்தல் | அழித்தல் | மறைத்தல் | அருளல் |
| பஞ்சபூத இயல்புகள் | கடினமாய்த் தரித்தல் | குளிர்ந்து பதமாதல் | சுட்டு ஒன்று வித்தல் | பரந்து சலித்துத் திரட்டல் | நிரந்தரமாய் நிறைந்துநிற்றல் |

II புலன்கள் ஐந்து: ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம்

III ஞானேந்திரியங்கள் ஐந்து:

| | செவி | தோல் | கண் | நாக்கு | மூக்கு |
|---|---|---|---|---|---|
| அவைபொருந்திய பூதங்கள் | ஆகாயம் | காற்று | தீ | நீர் | நிலம் |
| அவைபற்றியறிந்த புலன்கள் | ஓசை | பரிசம் | உருவம் | சுவை | நாற்றம் |

IV கன்மேந்திரியங்கள் ஐந்து:—

| | வாக்கு | பாதம் | பாணி | பாயு | உபத்தம் |
|---|---|---|---|---|---|
| அவைபொருந்திய பூதங்கள் | ஆகாயம் | காற்று | தீ | நீர் | நிலம் |
| அவைகளைப் பொருந்தி இயற்றும் தொழில்கள் | வசனித்தல் | நடத்தல் | ஈதல் ஏற்றல் | மலம் (சலம்) கழித்தல் | விந்து விடுதல் |

V அந்தக்கரணங்கள் நான்கு —

| | மனம் | புத்தி | அகங்காரம் | சித்தம் |
|---|---|---|---|---|
| அவற்றினியல்பு | விடயங்களை விரும்பிப்பற்றி நிற்றல் | நிச்சயித்தல் | பலமுறை எழுந்திருந்து அபிமானித்து ஊக்குதல் | நிகழ்ந்ததனைச் சிந்தித்து நிற்றல் |

## வித்தியா தத்துவங்கள் ஏழு :-

| | காலம் | நியதி | கலை | வித்தை | இராகம் | புருடன் | மாயை |
|---|---|---|---|---|---|---|---|
| அவற்றினியல்பு | கழிகாலத்தெல்லை, நிகழ்காலப்பலம் எதிர்காலப்புதுமை என்பவற்றைப் பொருத்துவித்தல் | கன்மத்தை நிச்சயித்து நிறுத்துதல் | ஆணவத்தைச் சிறிது நீக்கிக் கிரியையை எழுப்புதல் | அறிவை எழுப்புதல் | அனுபவியாத விடயங்களில் இச்சையை எழுப்புதல் | விடயங்களிலே அழுந்துவித்தல் | மயக்கஞ் செய்து நிற்றல் |

## சிவதத்துவங்கள் ஐந்து :-

| | சுத்தவித்தை | ஈசுரம் | சதாக்கியம் | சத்தி | சிவம் |
|---|---|---|---|---|---|
| அவற்றினியல்பு | ஞானம் ஏறிக் கிரியை குறைந்து நிற்பது | கிரியை ஏறி ஞானங்குறைந்து நிற்பது | ஞானமுங்கிரியையும் ஒத்தஅளவிற் பொருந்தி நிற்பது | கிரியையை உடையதாய் இருப்பது | ஞானஉருவாய் இருப்பது |